## IV.—GOVERNMENT MOTIONS.

### (1) ASSOCIATION OF FIVE MEMBERS WITH THE COMMITTEE ON ESTIMATES OF THE LEGISLATIVE ASSEMBLY.

THE HON. SRI R. VENKATARAMAN, Sir, I move—

" That this House nominates the following five members to associate with the Committee on Estimates of the Legislative Assembly for the year 1960–61—

(1) Sri T. P. Srinivasavaradan.

(2) Sri N. Nallasenapathti Sarkarai Manradiar.

(3) Sri M. Rajagopal Pillai.

(4) Sri A. Chidambara Mudaliar.

(5) Sri S. T. Adityan."

MR. CHAIRMAN : The question is—

**The motion was put and carried.**

" That this House nominates the following five members to associate with the Committee on Estimates of the Legislative Assembly for the year 1960–61—

(1) Sri T. P. Srinivasavaradan.

(2) Sri N. Nallasenapathi Sarkarai Manradiar.

(3) Sri M. Rajagopal Pillai.

(4) Sri A. Chidambara Mudaliar.

(5) Sri S. T. Adityan "

### (2) DRAFT OUTLINE OF THE THIRD FIVE YEAR PLAN—*cont.*

MR. CHAIRMAN : We will continue the discussion on the draft outline of the Third Five-Year Plan. Speeches will be limited to ten minutes. Sri Ponnuswamy Chettiar will now speak.

SRI S. R. P. PONNUSWAMY CHETTIAR: *தலைவரவர்களே,* முதலிலே இப்போது வெளியிட்டிருக்கக்கூடிய மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தை, அதனுடைய எல்லா அம்சங்களையும் பார்க்க, மனப்பூர்வமாக வரவேற்கின்றேன். அரசாங்கம் போடுகின்ற திட்டங்களை மக்கள் எவ்வளவு தூரம் உணர்ந்து செயல்படுகிறார்கள் என்பது, சமீபத்திலே சென்னை அரசாங்கத்தால் வெளியிடப்பட்ட 12 கோடி ரூபாய் loan தாராளமாகக் கிடைத்ததிலிருந்தே தெரிகிறது ; இது அரசாங்கம் திட்டமிட்டுத்தான் காரியங்கள் செய்யவேண்டும் என்பதைப் பொது மக்கள் வெகுவாக ஆதரிக்கிறார்கள் என்பதைக் காட்டுகிறது. இந்தத் திட்டத்திலே குறிப்பாக நமது இராஜ்யத்தில் பெருவாரியாக இருக்கக்கூடிய கைத்தறித் தொழிலை எடுத்துக் கொள்கிறேன். அதைப் பார்த்த அளவில் இவ்வளவு காலமாக அந்தத் தொழிலுக்கு என்னென்ன நன்மைகள் செய்து இருக்கிறார்களோ, அவைகள் எல்லாவற்றைக் காட்டிலும் மிகச்

0th September 1960] [Sri S. R. P. Ponnuswamy Chettiar]

சிறந்த முறையிலே இந்த மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்திலே செய்து இருக்கிருர்கள் என்பது தெரிகிறது. குறிப்பாகச் சொல்லப்போனுல், இன்றையதினம் கைத்தறி ஜவுளிகள் சரியான முறையில் செலவாகவில்லை; நெசவாளர்களுக்கு ஏராளமான கஷ்டங்கள் இருக்கின்றன என்பதாகப் புகார்கள் வருகின்றன. அந்தக் கைத்தறித் தொழிலிலே நேரடியாகச் சம்பந்தம் உள்ளவன் என்ற முறையில் நான் சொல்லுகிறேன்: பரம்பரை பரம்பரையாக பண்டைய காலம் தொட்டு இருக்கிற முறையை இப்போது இருக்கிற நாகரீகத்துக்கு ஏற்ற முறையில் மாற்றிக்கொள்ளாமல், அதையே வழக்கமாகச் செய்துகொண்டு வருகிற சில இடங்களில்தான் நெசவாளர்களுக்குக் கஷ்டம் இருக்கிறது. உதாரணமாகச் சொல்ல வேண்டுமென்ருல் மதுரைக்குக் கிழே திருநெல்வேலிவரை உள்ள நெசவாளிகள் பகுதியிலேதான் அதிகமாகக் கூக்குரல் கிளம்பிக்கொண்டு இருந்தது, நூல் விலை அதிகம் என்று. அது வாஸ்தவம். அதைக் குற்றம் என்று சொல்லவில்லை. காரணம் என்ன வென்ருல், அவர்கள் பழைய தரத்தையே கையாண்டு விற்பனை செய்துவருகிருர்கள். அதை நன்கு உணர்ந்து இன்றையதினம் சென்னை அரசாங்கம் மதுரைக்கும் திருநெல்வேலிக்கும் நடுவிலே Processing unit என்ற சாதனத்தை வைக்க வேண்டு மென்று அரசாங்கம் தீர்மானித்து இருப்பது மிகவும் வரவேற் கத்தக்கது. உதாரணமாகச் சொன்ஞல், ஈரோட்டிலே கைத்தறித் தொழிலில் Processing unit வைத்துக் கொண்டு இருக்கிருர்கள். அவர்கள் இதே நூல் விலையை அதிகம் என்று சொல்லுவதில்லை. காரணம், துணிக்கு சரியான முறையில் மார்க்கட், நல்ல விலைக்கு விற்க முடிகிறது. அந்த Processing unit-ஐ இந்த மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்திலே சேர்த் திருப்பது மிகவும் வரவேற்கக்கூடியது.

தனியான முறையிலே சொல்லப்போனுல், நெசவாளிகளுக்கு பிராவிடென்ட் நிதி ஒன்று சேர்த்திருக்கிருர்கள். இது எவ்வளவு அவசியம் என்பதை எல்லோரும் நெசவாளர் குடும் பத்தில் சகஜமாகப் பார்க்கலாம். நெசவாளி தன் கை கால் களில் பலம் இருக்கிற வரையில் பாடுபடுவான். அந்த நிலையிலே அவனுடைய மகன் விவாகமாகி வெளியே சென்று விடுவான். அந்த நெசவாளி தன் வயது முதிர்ந்த காலத்திலே நடுத் தெருவிலே இருக்க வேண்டிய நிலையில் இருக்கிருன். ஆகை யினுல் இந்தத் திட்டம்—பிராவிடென்ட் பண்ட் திட்டம்—நெச வாளிகளுக்கு வருவது மிக மிக வரவேற்கக் கூடியது. உண்மை யில் சொல்லப்போனுல், லட்சக் கணக்கான மக்கள் சிறந்த முறையில் பயனடைய அரசாங்கம் ஒரு வாய்ப்பு ஏற்படுத்திக் கொடுத்திருக்கிறது என்பதைத்தான் நான் சொல்ல விரும்பு கிறேன். அதே மாதிரி கைத்தறித் தொழிலிலே சென்னை அரசாங்கம் தைரியமாக அந்தத் தொழிலிலுள்ள நிலைமையை நன்கு உணர்ந்து இன்றையதினம் அந்தத் துறையிலே குறைந்தது 2,500 விசைத்தறிகளைப் புகுத்த வேண்டுமென்று செய்திருக்கிற முடிவை நான் பாராட்டுகிறேன். வெகுநாட் களாக இந்தத் தொழில் எப்படி இருந்து வருகிறது என்று

[Sri S. R. P. Ponnuswamy Chettiar] [9th September 1960

பார்த்தால், அது எந்த முறையில் இருக்கவேண்டுமோ அவ்வாறு இருக்கச்செய்வதை விட்டு விட்டு, தவருன முறையிலோ அல்லது சரியாகவோ அரசியலை அதில் கலக்கி, உண்மையில் அந்தத் தொழில் நடக்கவேண்டியதைத் தடைப்படுத்திக் கொண்டு இருந்தார்கள் என்பது தெரியவரும். இன்றையதினம் உண்மையில் தொழிலமைச்சர் மனப்பூர்வமாக இந்தத் தொழில் மீது அக்கறை கொண்டு செய்த இந்த சென்னை அரசாங்கத்தின் தைரியமான முடிவைப் பலர் விரும்புகிருர்கள். விசைத்தறிகள் அவசியம் வேண்டுமென்று பலர் எண்ணுகிருர்கள்; ஆனல் தைரியமாகச் சொல்வது இல்லை. விசைத்தறிகள் வேண்டாம் வேண்டாம் என்று சொல்லிக்கொண்டிருக்கிறபோது, பக்கத்திலே இருக்கக்கூடிய பம்பாய், கல்கத்தா, இந்த இடங்களில் ஏராளமாக விசைத் தறிகள் இருக்கின்றன. அகில இந்திய ரீதியாக விசைத் தறிகள் வைக்க லைசென்ஸ் கொடுப்பதில்லை என்று வைத்துக் கொண்டாலும், விசைத்தறிகள் வைப்பதைத் தடுப்பதில்லை என்று இருக்கிருர்கள். அங்கு விசைத்தறிகள் ஏராளமாக இருப்பதன் காரணமாகத்தான் இங்கே கைத்தறிக்கு சப்ளையாகிக் கொண்டு இருந்த நூல் விலை ஏறிவிட்டது. எனக்கு நன்ருகத் தெரியும் எங்கள் மில்லை எடுத்துக்கொண்டால், கைத்தறிக்கு வந்துகொண்டிருந்த நூல் பம்பாய், வங்காளம் போன்ற இடங்களில் விசைத் தறிகள் வந்ததின் பயனுகக் கோன் நூலாக மாறிச் சென்று கொண்டிருக்கிறது. ஆகையால் அரசாங்கத்தின் முடிவை மனப் பூர்வமாக பாராட்டுகிறேன். ஆனல் ஒரு வேண்டுகோள். எல்லாம் கனம் அமைச்சர் அவர்கள் இந்த மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்திலே சொல்லியிருக்கிருர்கள். 2,500 தறிகளுக்கு (கோவாபரேடிவ்) கூட்டுறவு அடிப்படையிலே தான் கொடுக்கவேண்டுமென்று. கூட்டுறவு அடிப்படையில் கொடுக்கவேண்டும் என்பதை எதிர்க்கவில்லை. அதே சமயத்தில் தனிப்பட்டவர்களுக்கும் கொடுக்கவேண்டும் என்பதுதான் என் கோரிக்கை. பல காலமாக கைத்தறித் தொழிலிலே கூட்டுறவுக்கு அப்பால் உள்ளவர்களுக்குக் குறை இருந்துவந்தது. கூட்டுறவின் அடிப்படையில் இருப்பவர்களுக்கு மட்டும்தான் வசதிகள் செய்கிருர்கள். கூட்டுறவு அடிப்படையிலே இருப்பதைக் காட்டிலும் தனியார் துறையில் இருக்கக் கூடிய தறிகள் அதிகமாக இருந்தும் கூட அவர்களை அரசாங்கம் கவனிக்கவில்லையே என்ற குறை இருந்து வந்தது. சென்ற வருஷம் சென்னையைப் பொறுத்த அளவில் (Handloom Seminar) ஒன்று நடந்தது. கனம் அமைச்சர் அவர்கள் சொல்லியிருந்தார்கள்: "தனியார் துறை நெசவாளிகளைக் கவனிக்கவில்லை என்ற குறை இருக்கிறது. அது நியாயமான குறை, நிவர்த்தி செய்ய வேண்டிய குறை." நிவர்த்தி செய்து தீர வேண்டும் என்று கனம் அமைச்சர் சொல்லியிருந்தார். அதை அனுசரித்து இன்றைய தினம் கூட்டுறவுக்கு அப்பால் உள்ள (Master Weaver) களுக்கு ஒத்தாசை செய்ய 25 லட்ச ரூபாய் மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஒதுக்கியிருப்பதைப் பாராட்டுகிறேன். அந்தத் தொகை குறைவுதான். நன்ருகத் தெரியும்.

கூட்டுறவு துறையில் உள்ள தறிகளைக் காட்டிலும் வெளியே இருக்கக் கூடிய தறிகள் தான் அதிகம். அப்படி இருந்தும், 25 லட்ச ரூபாய் குறைவாக இருந்தாலும், அரசாங்கத்தின் மனப் பான்மையை—வெளியிலே உள்ள நெசவாளிகளை விட்டுவிட வில்லை, அவர்களின் கோரிக்கையை கவனித்துத் தான் தீரவேண்டு மென்ற நல்ல எண்ணத்தை—காட்ட அரசாங்கம் 25 லட்சம் ஒதுக்கியிருப்பதை நான் பாராட்டுகிறேன். அதே மாதிரி, கைத் தறித் தொழிலை இன்னும் சிறக்கச் செய்ய, கைத்தறித் துணிகளைச் சிறந்த முறையில் வெளிநாடுகளுக்கு ஏராளமாக ஏற்றுமதி செய்ய வசதி செய்ய வேண்டும் என்று கிழக்குப் பகுதி நாடு களுக்கு ஒரு delegation அனுப்பியிருக்கிறார்கள்; அதையும் பாராட்டுகிறேன். அதே மாதிரி மேற்குப் பகுதிக்கும் அமெரிக் காவுக்கும் ஒரு delegation—கைத்தறித் தொழிலில் நேரடியாக சம்பந்தம் உள்ளவர்களை—அனுப்ப வேண்டும் என்ற யோசனை யைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். கோவையைச் சேர்ந்தவன் இந்தத் தொழிலில் சம்பந்தம் உள்ளவன் என்ற முறையில் சொல்கிறேன். அமைச்சருக்கு நன்றாகத் தெரியும். கோவையில் மில்களில் பெண்களுக்கு வேலையில்லை என்ற புகார் வந்து கொண்டிருக்கிறது. காரணம் என்ன வென்றால், நூலை உபயோகிக்கும் முறை மாறிவிட்டது. அதன் காரணமாகப் பெண்களுக்கு வேலை இல்லை. புதிதாகப் பெண்களுக்கு வேலை 3-30 p.m. கிடைக்கும் வாய்ப்புகளும் இல்லை. அதைச் சரிக்கட்டித் தீர வேண்டும். அந்த நிலையில் நமது இராஜ்யத்திலேயே ஏன் நமது தேசத்திலேயே ஒரு இடத்திலும் இல்லாத, கைத்தறிக்கு உபயோகித்து வருகிற ஜரிகை செய்யும் தொழிற்சாலையைக் கோவையில் நிறுவ வேண்டும். எல்லோருக்கும் நன்றாகத் தெரியும். அந்தத் தொழிற்சாலையில் பெண்கள்தான் அதிகமாக வேலை செய்ய வேண்டும். பெண்களுக்கு வேலை வாய்ப்பு கிடைக்கும். குடிசைத் தொழில் என்ற முறையில் பணம் ஒதுக்கிவிடலாம். Handloom Cess-லிருந்து எடுத்துச் செலவழிக் கலாம். அதற்கு 20 லட்சம், 25 லட்சம் ரூபாய் வேண்டாம். ஐந்து லட்சம் இருந்தால், தாராளமாகச் செய்யக் கூடிய தொழில் அது. அதை மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்த்துக்கொள்ளலாம்.

THE HON. SRI R. VENKATARAMAN: அந்தத் தொழிலை தனியாரும் ஆரம்பிக்கலாம்.

SRI S. R. P. PONNUSWAMY CHETTIAR: நமது ராஜ்யத்தில் கைத்தறியுடன் இணைக்கக்கூடிய அடுத்த முக்கியமான தொழில், நூல் ஆலைத் தொழில் தான். நூல் ஆலைகளைப் பொறுத்தவரையில், அகில இந்தியாவிலுமுள்ள கதிர்களில் 25 சத விகிதம் நமது ராஜ்யத்தில் இருந்தாலும் கூட, தறிகள் நமது ராஜ்யத்தில் மிகக் குறைவாக இருக்கின்றன. இதை இந்தத் தொழில்களில் நல்ல அனுபவமுள்ள நிபுணர்கள் சொல்லுகிறார்கள். இந்தத் துறையில் நமது ராஜ்யத்தில் ஏற்பட்டுள்ள தொழில் வளர்ச்சியை நல்ல வளர்ச்சி என்று

[Sri S. R. P. Ponnuswamy Chettiar] [9th September 1960

சொல்ல முடியாது. கதிர்கள் மாத்திரம் அதிகமாக இருக்கின்றன, தறிகள் மிகக் குறைவாக இருக்கின்றன என்று சொல்லுகிறார்கள். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் " மாடெஸ்ட் "-ஆக, ரொம்ப அடக்கமான முறையில் 10,000 தறிகள் இங்கே வேண்டும் என்று நமது அரசாங்கம் கேட்பதாகத் தெரிகிறது. இவ்வளவு குறைவாக, இவ்வளவு நிதானமாகக் கேட்க வேண்டியதேயில்லை, இன்னும் அதிகமான தறிகள் இந்த ராஜ்யத்திற்கு வேண்டுமென்று ஓங்கிக் கேட்கலாம், நிமிர்ந்து கேட்கலாம் என்று நான் சொல்ல விரும்புகிறேன். காரணம், இந்த ராஜ்யத்தில் ரொம்பக் குறைவாகத்தான் தறிகள் இருக்கின்றன. அகில இந்தியாவிலுள்ள மொத்தத் தறிகளில் 5 சதவிகிதம் தான் இந்த ராஜ்யத்தில் இருக்கின்றன. இந்த ராஜ்யத்திற்கு 10,000 தறிகள் வேண்டுமென்று கேட்டுள்ள இந்த அரசாங்கத்தார் அதற்கேற்ற அளவில் கதிர்களும் வேண்டும் என்று சொல்லியிருக்கிறார்கள். மூன்றாவது திட்டத்தில் இந்தியா முழுவதற்குமாக 20 லட்சம் கதிர்கள் ஒதுக்கத் தீர்மானித்திருக்கிறார்கள். அவைகளில் 5 லட்சம் கதிர்களை நமது அரசாங்கம் அவசியம் சென்னை ராஜ்யத்திற்கு வாங்கித்தான் தீரவேண்டுமென்று சொல்லிக் கொள்கிறேன்.

நேரம் குறைவாக இருப்பதால் கொஞ்சம் சீக்கிரமே என் பேச்சை முடித்துவிட விரும்புகிறேன். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சென்னைக்கு ஒரு புது யுனிவர்ஸிடி வருவதை நான் வரவேற்கிறேன். அந்த யுனிவர்ஸிடியை கோயம்புத்தூரில் அமைக்க வேண்டும், மதுரையில் அமைக்க வேண்டும் என்றெல்லாம் சிலர் சொல்கிறார்கள். மதுரையில் யுனிவர்ஸிடி அமைக்க வேண்டும் என்று சட்ட சபையில் சில அங்கத்தினர்கள் சொன்னார்கள். மதுரையில் யுனிவர்ஸிடி வைக்க வேண்டாம் என்று நான் சொல்லவில்லை. கோவை நகரமும் மதுரையைப் போல் முக்கியமான நகரம். கோவை நகரத்தில் ஒரு என்ஜினியரிங் காலேஜ் இருக்கிறது, ஒரு விவசாயக் கல்லூரி இருக்கிறது, ஒரு பாரெஸ்ட் காலேஜ் இருக்கிறது. ஒரு டிசெர்ஸ் ட்ரெய்னிங் காலேஜும் இருக்கிறது, ஆர்ட்ஸ் காலேஜுகளும் இருக்கின்றன. இவ்வளவும் அமைந்த கோவை நகரத்தில் ஏன் ஒரு யுனிவர்ஸிடி வைக்கக் கூடாது ? நமது ராஜ்யத்தைப் பொறுத்த வரையில் புதிதாக ஒரு யுனிவர்ஸிடிக்குப் பதிலாக, மதுரையில் ஒன்றும் கோவையில் ஒன்றுமாக ஏன் இரண்டு யுனிவர்ஸிடிகள் வைக்கக்கூடாது என்று நான் கேட்க விரும்புகிறேன்.

SRI S. NATARAJAN: அங்கே மெடிகல் காலேஜ் வைத்து விட்டால் யுனிவர்ஸிடி அங்கே தானாகவே வந்துவிடும்.

SRI S. R. P. PONNUSWAMY CHETTIAR: காலஞ்சென்ற ஸ்ரீ. சி. எஸ். ரத்னசபாபதி முதலியார் அவர்கள் தலைமையில் சென்னை அரசாங்கத்திடம் ஒரு டெப்யூடேஷன் வந்து, கோவையில் ஒரு யுனிவர்ஸிடி வைக்க வேண்டும் என்று நாங்கள்

ஒரு மெமொராண்டம் கொடுத்திருக்கிறோம். அதைத் தயவு செய்து பரிசீலிக்கும்படி அரசாங்கத்தை மிகவும் வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறேன்.

நான் இன்னொரு விஷயம் சொல்ல விருபுகிறேன். கோவை நகரில் நல்ல குடிதண்ணீருக்கு நன்ருக ஏற்பாடு செய்ய வேண்டும். அங்கே குடிதண்ணீருக்கு இப்போதுள்ள ஏற்பாடு வெகு காலத்திற்கு முன்பு ஒரு லட்சம் ஜனத்தொகை இருந்த போது செய்யப்பட்ட ஏற்பாடு ஆகும். இப்போது கோவையில் 4 லட்சம் மக்கள் இருக்கிறார்கள். அங்கே இப்போது சில இடங்களில் தண்ணீர் சரிவர வருவதில்லை. எங்கள் பக்கத்தில் தாய்மார்கள் "எங்களுக்கு என்ன தினமும் தீபாவளியா" என்று கேட்பார்கள். தீபாவளி என்றால் மிகவும் சந்தோஷமாக இருக்கும் நாள் என்ற அர்த்தத்தில் அவர்கள் அவ்வாறு சொல்வதில்லை. தீபாவளியன்று காலையில் குளிப்ப தற்காக தாய்மார்கள் இரவு மூன்று, நான்கு மணிக்கே எழுந்து தண்ணீர் பிடித்து வைக்க வேண்டும். அந்த மாதிரியான கஷ்டத்தைக் குறிப்பிடுவதற்காகத்தான் "எங்களுக்கு தினமும் தீபாவளியா" என்று அவர்கள் கேட்பார்கள். அவர்கள் தண்ணீருக்கு அவ்வளவு கஷ்டப்படுகிறார்கள். மூன்றாவது திட்டத்தில் குடிதண்ணீர்த் திட்டத்திற்கென 25 லட்சம் ரூபாய் தான் இங்கே ஒதுக்கப்படுகிறது. இதைப் பார்த்தால், இன்னும் எத்தனை திட்டங்கள் வந்தாலும் கோவை நகரம் முன்னேறாதோ என்று தோன்றுகிறது.

தொழில் துறையை எடுத்துக்கொண்டால், இங்கே ஆரம்பிக்கக்கூடிய தொழில்களையெல்லாம் குறிப்பிட்ட ஒரு லிஸ்டை வெளியிட்டு, அந்தத் தொழில்களை யார் வேண்டு மானாலும் ஆரம்பித்து நடத்தலாம் என்று சர்க்கார் சொல்ல வேண்டும். அவ்வாறு செய்யாமல் தொழில்களை ஆரம்பித்து நடத்த மக்கள் அஞ்சுகிறார்கள் என்று சொல்வதில் பிரயோஜன மில்லை. பல தொழில்களை ஆரம்பித்து நடத்த உடனடியாக மின்சாரம் வேண்டும். பல தொழில்களுக்கு இரும்பு உடனடியாக வேண்டும். அவற்றிற்கெல்லாம் வேண்டிய வசதிகளைச் சர்க்கார் செய்து தர வேண்டும் என்று நான் சொல்ல விரும்புகிறேன்.

மேலும், இந்த ராஜ்யத்தில் "ஸ்டீல் ரீரோலிங் மில்ஸ்" போதிய அளவு இல்லை. இந்தியா முழுவதிலுமாகப் பார்த்தால் அவை மொத்தம் 200-க்கு மேல் இருக்கின்றன. ஆனால் நமது ராஜ்யத்தில் அவை 5 அல்லது 6 தான் இருக்கின்றன என்று நினைக்கிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN: இரண்டுதான் இருக் கின்றன.

SRI S. R. P. PONNUSWAMY CHETTIAR: இங்கே 8 அல்லது 10 இருக்க வேண்டும். இந்தியா முழுவதிலுமாக அவைகள் எத்தனை இருக்கின்றன என்பதைப் பார்க்கும் போது,

[Sri S. R. P. Ponnuswamy Chettiar] [9th September 1960

இந்த ராஜ்யத்தில் அவை 8 அல்லது 10 இருக்க வேண்டும் என்று சொல்ல விரும்புகிறேன். இந்த ராஜ்யத்தில் அவை மிகக் குறைவாக இருப்பதற்குக் காரணம் என்ன என்று . . . .

THE HON. SRI R. VENKATARAMAN: அதற்கு லைஸென்ஸ் வேண்டுமென்று கேட்க வேண்டிய காலத்தில் நாம் எல்லோரும் தூங்கிக் கொண்டிருந்ததுதான் அதற்குக் காரணம்.

SRI S. R. P. PONNUSWAMY CHETTIAR: இனிமேலாவது இந்த ராஜ்யத்தில் அவைகளை எற்படுத்த மக்கள் முன்வந்தால் அவர்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்ய அரசாங்கம்
3-40 p.m. முன் வரவேண்டும் என்று கோரிக்கொள்கிறேன். இத்துடன் என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

SRI MOHAMED RAZA KHAN: Sir, I move the following amendment :—

" *Add* the following at the end :

' and on such consideration, this House urges that emphasis be laid on the following items for implementation in Madras State in the Third Five-Year Plan '—

1. Steel Plant and Lignite Project.
2. The utilisation of surplus waters of the neighbouring States for the mutual benefit of the State concerned.
3. The Development of Tuticorin as a major port as a part of the Sethusamudram Project.
4. Nuclear Power Plant.
5. Oil Refinery."

SRI S. NATARAJAN: I second the amendment.

SRI MOHAMED RAZA KHAN: Sir, I have yet to make up my mind whether I should congratulate the Government of Madras on their Draft Third Plan the outlay of which is more than 300 crores of rupees. I leave it to the future generations to decide things for themselves. If we see the working of the two Plans under taken already, we will find that particularly in regard to the Second Plan, we have exceeded the target by about 32 crores of rupees. But the fact remains that they have been implemented without their having any striking influence on the average citizen. Let me hope that at least the Third Plan so enthusiastically set out would be more realistic. The Hon. Leader of the House is not only an eminent lawyer but also an economist. The other day he said: "Don't you go and see things in Neyveli where people are wearing handloom dhotis of finer varieties and purchasing bicycles which they could not afford before." That is his satisfaction. But all the same, the fact remains that the real life of the people is the same in spite of all the Government's bosting up. It is as difficult as it was before, if not worse. The main difficulty about the Plan isthe heavy expenditure it involves. Taking the country as a whole, it envisages an outlay of 10,200 crores of rupees. The planners are silent as to how they are going to find

9th September 1960] [Sri Mohamed Raza Khan]

the resources for financing this Plan. They only entertain the pious hope that they can get 2,000 crores of rupees by way of foreign aid. Granting that we get this amount. . .

Sri T. P. SRINIVASAVARADAN : It is 3,000 crores.

Sri MOHAMED RAZA KHAN : I think it is 2,200 crores, if I remember aright. Any way, numbers do not matter. (Laughter). The Planners are silent as to how they can find the balance of 8,000 crores of rupees. Even the Draft Plan of our State is significantly silent on this point of finding resources to finance the Plan. Where are we going to find the means? It is quite possible we may get 40 to 50 per cent of the expenditure met by the Centre. We may get assistance in dribblets from the Centre. Even then there is going to be a big gap between what we can afford and what is to be got from the Centre in the course of the five years of the Plan. As I have said on other occasions, as far as our taxation measures are concerned, we hav reached the saturation point. The Ministers are aware that they are at their wit's end so far as finding resources by means of fresh taxation is concerned. So, this is a major problem which we have to tackle as far as the Plan is concerned. No arguments will get money. It is a fact, Sir, that it is more for the future that the Plan is intended. It is not for the present. The present is not at all thought of. That is a fundamental mistake which the Planners have committed. Of course, they may ask the present generation to make sacrifice after sacrifice. But human nature being what it is, people think more of the present than of the future. This generation cannot, therefore, be asked to bear more and more burdens for doing something good for the future. The Planners' ultimate object it is to achieve something for the future at the expense of the present generation. When I am on this subject, I must mention one important feature of the Plan. Even the Planners have said that the Plan will have no impact on the people if prices of commodities continue to rise. I am making reference to this particular point because the Hon. Leader of the House refused to be convinced saying that when a plan involving heavy expenditure was being implemented it was inevitable that prices went up. I am happy, however, that he realises that there is a problem which has to be solved in some way or other. Yesterday, my hon. Friend, I do not remember his name, asked the Hon. Minister for Home as to what he proposed to do to bring down prices. (Sri T. P. Srinivasavaradhan : I put the question.) Yes. The Minister i mmediately stood up and put the same question to the Member. It was a proper and fitting reply. Let us take up the other side of the picture. I am not going to make any cheap comments that the Centre is not caring ror us in the South and all that. In the course of the two Plans, what is it that has been done by the Centre for us? We have got two things. One is the Integral Coach Factory in Madras built at a cost of 14 crores of rupees. It was built here not because the Centre wanted it to be located in South India but because

factilities were available only here since he Perambur Factory was already working and they could achieve a lot of progress within so short a time. The second thing about which we could ze pardonably proud is the Neyveli project which the Government of India have undertaken at a cost of 70 to 80 crores of rupees. Besides these, there is no other major industry in the South set up by the Centre. As I said, Sir, the question of resources is a very difficult question to solve. The last Finance Commission were not very much fair to Madras, having regard to its backwardness and lack of resources. The Chairman is well aware of this fact. While in the olden days the Government would not come forward to take up a project unless they were sure of a four or five per cent return, now there are projects which could get only 0·5 or one per cent return. This is so because our natural resources are so limited. Having regard to these, the list Finance Commission must have been fair to us. But they were not. Let us hope that the new Commission that is being appointed will be fair and do justice to Madras in view of the difficulties with which we are faced.

Sir, the time at my disposal is short and I cannot dilate on all the items mentioned in my amendment. With regard to Central projects in Madras, we have not had much of a share. Therefore, emphasis must be laid on the Centre installing some of these plants in the State of Madras. This is not a point made by the Opposition alone. Even the Government have realised it and they feel that all parts of the country should be brought up to the same level. This has been mentioned in the Governor's Address also which we debated recently. I am sure the Madras Government will use their good offices to see that major industries are set up in Madras. Speaking particularly about the various items I have mentioned in my amendment, in regard to agriculture, our resources are very much limited. We have practically nothing to tap. All our major irrigation schemes have already been executed. The only thing that we can think of at the end of the present plan and the beginning of the third plan is the Parambikulam project which involves a heavy expenditure of ten to twelve crores of rupees. I have said on previous occasions and I stand by it now that it is not fair or proper to discuss these matters in public. If waters are available, they have to be shared between States. But we cannot say : 'You have plenty of water; give it to us'. Let these things be settled by negotiations done in private. If surplus water is available in any one State, it should be made available to others who need it. It would be better if our Govrenment enter into an agreement with the neighbouring States for sharing their surplus waters. We must try to persuade them to part with something which they have by way of surplus, without detriment to their interests. If that is done, surely, it will be to our mutual advantage. Well, when Inida and Pakistan can settle their dispute, when our disputes with that neighbour of ours are getting settled amicably, it will be no surprise if we too come to some understanding with our neighbours. We do not claim their surplus waters as a matter of right. It is a question of adjustment and accommodation.

9th September 1960]

MR. CHAIRMAN : The hon. Member's time is up.

MR. CHAIRMAN: The hon. Member may finish in five minutes. Sir. I will finish by four of the clock.

MR. CHAIRMAN : The hon. Member may finish in five minutes.

SRI MOHAMED RAZA KHAN: With regard to steel and lignite, something has been done. Still the lignite that can be tapped is very limited. The possibility is there. I am sure it can be doubled in two or three years. Sir, our State is going to spend about Rs. 70 to 80 crores on the development of power. In spite of the Third Plan, the Kundah Project, the Mattur tunnel, scheme and the Neyveli, the shortfall in power will be to the extent of 25 per cent so far as this State is concerned. Therefore I feel that the output of the lignite project should be doubled and more power generated there. 3-50 p.m.

Sir, the hon. Member Sri K. T. Kosalram is not here. There has been so much agitation in the public with regard to the Tuticorin and the Sethusamudram projects. I do not like to go into the details. They are things which are long overdue. There was the possibility of the projects being taken up in the Second Plan itself. Owing to some influences or other things they were not taken up and the Government of India are convinced that they should be given priority. We hope that in the Third Plan they will be taken up.

Sir, regarding the nuclear power plant about which I have given an amendment, I wish to say a word. While speaking on the Electricity Board Budget, every Hon. Member stressed the importance of it. As I said earlier, our power production is short by about 25 per cent. Therefore the Government of Madras should press for this and use all their influence with the Government of India to see that the second atomic plant is located in the South, that is, in Madras.

With regard to Oil Refinery I see no reason why one should not be located in Madras, because we have got all the facilities. Apart from that, taking an over all picture of India this State is industrially backward. I do admit that something is being attempted here. But compared to conditions elsewhere, what is attempted here in insignificant. That is the real position. Much has been said about the establishment of a steel plant in Madras. Fortunately we have reached a stage when the Hon. Minister himself has admitted that there is a possibility. It is based on the report of experts. I am sure whatever the difficulty—I do not think there are insurmountable difficulties—a steel plant would be located in Madras. When Japan and Switzedland could have imported things and have such highly technical industries, there is no reason why Madras with potentialities—though they may be limited—

[Sri Mohamed Raza Khan] [9th September 1960

should not have one steel plant at Salem. I am sure the Hon. Minister who is trying to do his best—he has limitations of course—will use his influence with the Centre and see it is located in the South.

Thank you, Sir.

* SRI V. RANGASAMY: மதிப்பிற்குரிய மேல் சபைத் தலைவர் அவர்களே, மூன்ருவது ஐந்தாண்டுத் திட்ட நகல் மூலம் இந்த இராஜ்ஜிய மக்கள் பெறும் நன்மைகளைப் பரிசீலனை செய்யும் முன்பு, இந்தத் திட்டம் எத்தகைய சூழ்நிலையில் உருவாக்கப்பட்டு இருக்கிறது என்பதைப்பற்றி ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். தேசம் சுதந்திரம் பெற்ற காலையில் இந்த தேசத்தின் பொருளாதாரம் மதப் பிணக்கால் துண்டாடப்பட்டது என்பதை மறந்து விடக் கூடாது. அதோடுகூட இந்த தேசம் இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களின் மூலம் மக்களின் நல்வாழ்வுக்காகச் செலவழித்துள்ள பணத்தோடு தனியார் துறைக் காரியங்களுக்காகச் செலவழித்து இருக்கிற பணத்தையும் ஒப்பிட்டுப் பார்த்தால் உண்மையிலேயே இந்த இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களின் மூலம் அடைந்த சாதனைகள் நம் தேச மக்களால் மட்டுமல்ல, ஏனைய உலக வல்லரசுகளின் தலைவர்களால் கூடப் போற்றப் பட்டிருக்கிறது என்பதை மறந்து விடக் கூடாது. தேசத்தின் பொருளாதாரம் இரண்டாக்கப்பட்டு அகதிகளின் நிவாரணத் துக்காகவும் தேசத்தில் ஏற்பட்ட குழப்பத்தை அடக்குவதற் காகவும் சமஸ்தானதிபதிகளின் செலவுக்காகவும் ஒதுக்கப்பட்ட பணம், பின்பு ஜமீன்தாரி ஒழிப்புக்காகக் கொடுத்த நஷ்ட ஈடு, இந்த உலகத்தின் எந்தப் பகுதியிலும் இல்லாத புதிய விசேஷமாகத் தாழ்த்தப்பட்ட மக்களின் கொடுமையை நீக்கு வதற்காகச் செலவழிக்கப்பட்ட கோடிக்கணக்கான பணம், இவைகள் எந்த தேசத்தின் நிர்வாகத்திலும் காணமுடியாத புதிய சம்பவங்களாக இருக்கின்றன. அப்படியிருந்தும் கூட இந்தக் குறுகிய காலத்துக்குள்—பதின்மூன்று வருஷங் களுக்குள்ளே—நாம் அடைந்த மாபெரும் சாதனை உண்மையிலேயே உலக நாடுகளால் போற்றப்படுகிறது. ஒரு சில பெரியார்கள் இந்த நாட்டில் பண வீக்கம் இருப்பதால், விலை அதிகமாக உயர்ந்து கொண்டு போகிறது, அதைத் தடுக்க அரசாங்கம் எந்த வித நடவடிக்கையும் எடுக்கவில்லை என்று வருந்துவதாகத் தெரிகிறது. எந்த தேசமும் ஒரு மறுமலர்ச்சி காண விரும்பி நல்ல அபிவிருத்தித் திட்டங்களை வகுக்கும்போது உண்மையிலேயே அபிவிருத்திக்காக அந்த நாடு பணத்தை ஓரளவுக்கு உண்டு பண்ணத்தான் வேண்டியிருக்கிறது. அது செலவு மதிப்புக்குக் கட்டுப்பட்டுத்தான் இருக்குமே தவிர, அதற்கு அப்பாற்பட்டு போகாது. தேசத்தின் அபிவிருத்தித் திட்டங்களுக்காகச் செலவழிக்கும் பணம் அரசாங்கத்தின் மூலமாகத் தனியார் துறைக்குக் கொடுக்கும் சர்க்கார் பாங்கியின் குறைந்த வட்டிப் பணமாகவும் செயற்கை முறையில் அதிகரித்து வந்திருக்கிறது. ஒரு குறிப்பிட்ட காலம் வரையில் இந்த அம்சம் இருக்கத்தான் செய்யும். இதை அரசாங்கம் செய்யும் தவருகக் கருதுவது கூடாது. ஒரு குறிப்பிட்ட காலம் வரையில் இது நிவர்த்திக்க முடியாத அம்சமாகத் தான் இருக்கும். இந்தத்

9th September 1960] [Sri V. Rengaswamy]

திட்டத்திலே பொதுவாக விவசாய அபிவிருத்திக்காக ஒதுக்கப் பட்ட பணம் உண்மையிலேயே போதாத பணம் என்று தான் சொல்ல வேண்டியிருக்கிறது. நாகபுரித் தீர்மானத்தை நிறைவேற்றும் முறையில் இதற்காக ஒதுக்கப்பட்ட பணத்தைப் பார்க்கும்போது குறிப்பாகக் கூட்டுறவுப் பண்ணை மூலம் விவசாயம் செய்ய அதிகமாக ஒதுக்கவில்லை என்று கூற விரும்பு கிறேன். கூட்டுறவு விவசாயத்தின் மூலம் மக்கள் உற்பத்தியைப் பெருக்கத் தவறி விட்டார்கள் என்று அரசாங்கம் கருதுவதாகப் பலர் சொல்லிக்கொண்டு வருகிறார்கள். அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியின் மூலம் கூட்டுறவு அமைப்பாளனாக நான் 9 மாதம் தொண்டாற்றினேன் என்ற முறையில் நான் நிதர்சனமாக வாலாந்தூர் பண்ணைக்குச் சென்று நேரடியாகத் தொடர்பு கொண்டேன். நான் கேட்டதற்கு 6 மூட்டையி லிருந்து 8 மூட்டையாக அதிகரித்திருக்கிறது என்று சொன்னார்கள். வெளியில் பத்திரிகையில் வரும் சமாசாரத்தைப் பார்த்தால், உற்பத்தி அதிகரிக்கவில்லை, கூட்டுறவுப் பண்ணையின் மூலம் உற்பத்தி குறைகிறது என்று பிரசாரம் செய்யப்படுகிறது. கூட்டுறவு விவசாயத்தின் மூலம் நன்மை பெற்ற விவசாயிகள் வாலாந்தூர் பண்ணையில் சொன்னார்கள். ஆகவே இந்த நாட்டில் கூட்டுறவுப் பண்ணை விவசாயத்தை—கூட்டுப் பண்ணை அல்ல, இரண்டுக்கும் வித்தியாசம் இருக்கிறது என்பதையும் collective farming 200 ஏக்கருக்கு உட்பட்ட விவசாயம் என்பதையும் புரிந்துகொள்ள வேண்டும்—அபிவிருத்தி செய்வதற் காக அரசாங்கம் இன்னும் அதிகப் பணம் ஒதுக்க வேண்டு மென்று அரசாங்கத்திற்கு எடுத்துக் கூற விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, கல்வி சம்பந்தமாகப் பணம் ஒதுக்கப்பட்டு இருக்கிறது. இலவசமாக மாணவர்களுக்கு உணவு அளிப் பதோடு கூட பின்தங்கிய பகுதிகளில் உள்ள ஏழைகளுக்கும் ஹரிஜனக் குழந்தைகளுக்கும் உடை வசதி செய்யப் பணம் அதிக மாக ஒதுக்கப்பட வேண்டுமென்பது என் கருத்து.

தொழில் சம்பந்தமாகப் பேசும்போது ஒரு சில பெரியார்கள் பணவீக்கம் அதிகரித்திருக்கிறதேயொழிய அதற்கு ஏற்ற முறையில் உற்பத்திப் பொருள்கள் அதிகரிக்கவில்லை என்று வருத்தம் தெரிவித்தார்கள். ஒரு நாட்டிலே பணவீக்கம் இருந்த போதிலும் கூட ஆரம்ப நிலையிலுள்ள தொழிற்சாலைப் பொருள்கள் வெளிநாடுகள், முதலாளித்துவ, பொதுவுடைமை நாட்டுப் பொருள்களோடு போட்டிபோட முடியாததால், இறக்குமதியாகக் கூடிய பொருள்களின் மீது அதிக வரி விதித்தால்தான் உற்பத்திப் பொருள்களை அதிகமாக உற்பத்தி செய்யலாம். நம்நாடு வெளி நாடுகளோடு நேச உறவு வைத்துக்கொண்டு சார்ந்து வாழும் காரணத்தால், இறக்குமதிப் பொருள்களின் மீது அதிக வரி போடவோ அல்லது வெளி நாட்டின் பொருள்களை இறக்குமதி செய்யாமல் தடுக்கவோ நம் போன்ற குழந்தைப் பருவத்திலுள்ள நாட்டுக்கு வசதிப்படாது. ஆகவே இறக்குமதிப் பொருள்களை அனுசரித்து நம் தொழிற் சாலைகளை அபிவிருத்தி செய்துகொள்ள வேண்டும். இந்த

நிலையில் உள்ள தொழிற்சாலை அதிகமாகப் பொருள்களை உற்பத்தி செய்ய முடியாது. குழந்தைப் பருவத்திலுள்ள நம் தொழிற்சாலைகள் இந்த அளவுக்குத்தான் உற்பத்தி செய்ய முடியும். இதை சர்க்காரின் குறையாகக் கருதக் கூடாது என்று கேட்டுக்கொள்வதுடன், இந்தத் தொழிற்சாலைகளைத் தவிர, தனியார் அதாவது தனிப்பட்ட முதலாளிகள் நடத்துகின்ற தொழிற்சாலைகளுக்கு எந்த விதமான அரசாங்க உதவியும் இல்லை என்று சொல்வதோ அல்லது தனியார் துறையைத் தளரச் செய்யும் அளவுக்கு அரசாங்கம் தங்கள் தொழிற்சாலைகளை வளர்க்கிறது என்று சொல்வதோ பொருந்தாது என்று சொல்லிக் கொண்டு இத்துடன் என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

* SRI B. K. NALLASWAMI: மன்றத் தலைவர் அவர்களே, திட்டம் வகுப்பதை நம்முடைய நாட்டிலே நமது மதிப்புக்குரிய ஒரு தலைவர் கூட எதிர்த்து வருகிறார் என்பது ரொம்ப வருந்தத் தக்க விஷயம். ஏனென்றால் என்னைப் பொறுத்த வரையில் ரஷ்யாவினுடைய முதல் ஐந்தாண்டுத் திட்டத்தைப் பற்றிய British Parliamentary கமிட்டி ஒன்று ரஷ்யாவுக்குச் சென்று திருப்பி அனுப்பிய அறிக்கையை 1932-ம் வருஷம் சிறையில் படித்துப் பார்த்திருக்கிறேன். அதிலே நம்முடைய திட்டத்துக்கும் அவர்கள் போடக்கூடிய திட்டத்துக்கும் சிறிது வித்தியாசம் இருப்பது போல் எனக்குத் தோன்றுகிறது, அதனால் சொல்ல விரும்புகிறேன். கணக்கு, புள்ளி விவரம் கொடுக்கும் போது மாங்கனீஸ் எத்தனை லட்சம் டன்கள் உற்பத்தி செய்ய வேண்டும், நிலக்கரி எத்தனை லட்சம் டன்கள் உற்பத்தி செய்ய வேண்டுமென்று புள்ளிவிவரம் கொடுக்கிறார்கள்; நாம் எத்தனை
4-00 p.m. எத்தனை ரூபாய் செலவழிக்கிறோம் என்று புள்ளி விவரம் கொடுக்கிறோம். அதிலே தான் வித்தியாசம் இருக்கிறது. அங்கே தான் தவறு இருக்கிறது என்று நான் கருதுகிறேன். நமக்குக் கொடுக்கிற புள்ளி விவரம் எல்லாம் ரூ. அ. பை.-இல் இருக்கிறதே ஒழிய எவ்வளவு உற்பத்தி ஆகியிருக்கிறது என்ற அளவிலே நல்ல விளக்கமான ஒரு அறிக்கை நமக்கெல்லாம் கொடுக்கவில்லை என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. நாம் நம்முடைய இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் ஏற்படுத்தப்பட்ட தொகையைக் காட்டிலும் அதிகமாகச் செல வழித்தோம் என்று பெருமை கொள்ளலாமே ஒழிய அந்த அளவுக்கு உற்பத்தியைப் பெருக்கி இருக்கிறோமா என்று பார்த் தால்தான், நம்முடைய இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் மகத்தான வெற்றி பெற்றிருக்கிறதா இல்லையா என்பதை நாம் முடிவு செய்ய முடியும். மற்றத் தொழில்களில் உள்ள வருவாயைக் காட்டிலும் விவசாய வருமானம் ரொம்பக் குறை வாக வந்திருப்பது தான், நம்முடைய திட்டத்தினால் நாட்டில் சராசரி வருமானம் உயராதிருப்பதற்குக் காரணம் என்று நம் அறிக்கையில் குறிப்பிட்டிருப்பது ரொம்ப உண்மை. விவசாய வருமானம் போதிய அளவு உயரவில்லை என்றால் விவசாய உற்பத்தி அந்த அளவிற்குப் பெருகவில்லை என்று தான் நாம் நினைக்க வேண்டியிருக்கிறது. இதற்குக் காரணம் நிர்வாகத்தில் செய்யப்படும் பல தவறுகள் தான் என்று நாம் நினைக்க வேண்டி

9th September 1960] [Sri B. K. Nallaswami]

யிருக்கிறது. வேண்டிய சமயத்தில் வேண்டிய உரம் ஸப்ளே செய்யப்படுவதில்லை. பசுந்தாள் உரம், விதை முதலியவை தக்க சமயத்தில் சப்ளே செய்யப்படுவதில்லை. பயிர் நடவு காலத்தில் எல்லா இடங்களிலும் ஐ.எம்.எஸ். லோன்ஸ் கொடுக்கிறுர்கள். ஒரு பிளாக்கில் சுமார் 15,000 ரூபாய் கொடுக்கப்படுகிறது. இந்த சமயத்தில் சாதாரண விவசாயிகளின் வீடுகளில் இருக்கும் நகைகளெல்லாம் பாங்குகளுக்குப் போகும். உரம், விதைகள் முதலியவை வாங்க அவர்கள் நகைகளை பாங்கில் வைக்க வேண்டியிருக்கிறது. அவைகளை பாங்கில் வைத்து உரம், விதைகள் முதலியவைகளை வாங்கும் நிலையிலேயே ஒவ்வொரு விவசாயியும் இருக்கிறுன். நாம் பெரிய திட்டத்தை வகுக்கிறேம். ஐ.எம்.எஸ். லோன் குறுகிய காலக் கடனுகக் கொடுக்கப்பட்டால் கடன் ஐந்து, ஆறு மாதங்களில் திரும்பிவந்துவிடுகிறது. 18,000 ஏக்கர் விளைவிக்கக்கூடிய இடத்தில் 30,000 ரூபாய் ஐ.எம்.எஸ். லோன் கொடுத்தால் விவசாய உற்பத்தி எப்படிப் பெருகும்? 80 சதவிகித விவசாயிகள் கடன் வாங்கியே கொளிஞ்சியும் உரமும் வாங்க வேண்டிய நிலையில் இருக்கிறுர்கள். போதுமான உரத்தை வேண்டிய சமயத்தில் கொடுக்கிறேமா? இல்லை. இன்று இந்த ராஜ்யத்திலுள்ள நிலைமையைப் பார்த்தால், இப்போது போதிய அளவு உரம் கொடுக்கப்படவில்லை என்று சொல்ல வேண்டியிருக்கிறது. 7 லட்சம் ரூபாய்க்கு உரம் கொடுத்தால்தான் உற்பத்தியை நன்ருகப் பெருக்க முடியும். 30,000 ரூபாய் அளவுக்கு உரம் கொடுத்துவிட்டு உற்பத்தி பெருக வேண்டும் என்று சொன்னுல் அது நடக்கிற காரியம் அல்ல. இந்தமாதிரி நிர்வாகத்தில் பல தவறுகள் செய்கிறேம். பசுந்தாள் உர ஸப்ளேயும் இப்படித்தான் இருக்கிறது. நிலம் ஈரமாக இருக்கும்போது கொழிஞ்சி முதலியவை போட்டால் பயிர் நன்ருக வளரும். அந்த சமயத்தில் அவை கொடுக்கப்படுவதில்லை. அவை வேண்டாத சமயத்தில் கொடுக்கப்படுகின்றன. இன்று விலைவாசி உயர்வுக்குக் காரணம் எந்த அளவுக்குக் கைத்தொழில்கள் அபிவிருத்தியடைந்திருக்கின்றனவோ அந்த அளவுக்கு விவசாய வருமானம் உயரவில்லை என்று சொல்வது பொருந்தும். ஜனத்தொகையில் 75 சத விகிதத்தினராக இருக்கும் விவசாயிகளின் வருமானம் போதிய அளவு உயரவில்லை. இதுதான் விலைவாசி உயர்வுக்குக் காரணம்.

மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் தொழில்கள் அதிகமான அளவில் தனிப்பட்டவர்களுக்கே விடப்பட்டிருக்கின்றன என்று பலர் குறைசொல்லுகிறுர்கள். என்னைப் பொறுத்தவரையில், இந்தமாதிரி தனிப்பட்டவர்களுக்கே அதிகமான தொழில்களை விடுவது ரொம்ப சரி என்று எனக்குத் தோன்றுகிறது. இன்று நமது நாட்டு மக்களின் மனப் பண்பு சோஷலிஸ சமுதாயத்திற்கு ஏற்றதாக இல்லை. ஒரு சொத்து பொதுச் சொத்து என்றுல், அது யார் சொத்தும் இல்லை, அதை யார் வேண்டுமானுலும் என்ன வேண்டுமானுலும் செய்யலாம் என்ற மனப்பான்மை பொதுஜனங்களுக்கு இருக்கிறது. இந்த நிலையில் எல்லாத் தொழில்களையும் அரசாங்க உடைமையாக்கிறுல்

[Sri B. K. Nallaswami] [9th September 1960

அதனால் பெரும் தீங்குதான் ஏற்படும். முதலில் மக்களின் மனப்பான்மை மாற வேண்டும். பொதுச் சொத்தை, அரசாங்கச் சொத்தை நம் சொத்தைவிட அதிக அக்கறையுடன் கவனித்துக் கொள்ளவேண்டும் என்ற மனப்பான்மை குழந்தைப் பருவத்திலிருந்தே வளர்ந்தாலொழிய நாம் சோஷலிஸ சமுதாயத்தை அமைக்க முடியாது என்பது என் துணிபு. எனவே இந்த நிலையில் தனியார் எவ்வளவு தொழில்களை எடுத்துக்கொள்ளக் கூடுமோ அவ்வளவு தொழில்களை தனியாருக்கு விடுவது நல்லது என்று நினைக்கிறேன். அதிக லாபம் கொடுக்கக்கூடிய தொழில்களைத்தான் தனியார் எடுத்துக்கொள்ளுகிறார்கள். தனியார் "கன்ஸ்யூமர் குட்ஸ்" கொடுக்கக்கூடிய தொழில்களை எடுத்துக்கொள்கிறார்கள் என்றால், அத் தொழில்களில் நிறைய லாபம் கிடைக்கிறது. "ஸ்டீல்" தொழில்களைத் தனியார் எடுத்துக் கொள்கிறார்கள் என்றால், அத்தொழிலில் ஒரு லட்சம் ரூபாய் முதல் போட்டால் ஒரு லட்சம் ரூபாய் லாபம் வருகிறது. அவர்கள் சர்க்காருக்கு ஏதோ ஓரளவு பணத்தைக் காட்டுகிறார்கள். பாக்கிப் பணமெல்லாம் Black money ஆகிறது.
4-10 p.m. நேருஜீ கூட இதுசம்பந்தமாகக் குறிப்பிட்டிருக்கிறார். மேலும், நகைகளெல்லாம் முடக்கப்பட்ட மூலதனம் என்று காந்திஜீ சொல்லியிருக்கிறார். இதைக் குறிப்பிட்டால் "நாங்கள் நகை போட்டுக்கொள்ளக் கூடாது என்று சொல்கிறார்களே" என்று அரசியல் வாதிகள் மேடையில் துஷ்பிரசாரம் செய்கிறார்கள். நாம் செய்ய வேண்டிய பல காரியங்களை தைரியமாக நாம் செய்ய வேண்டும். நாம் செய்யும் காரியங்களை மற்றவர்கள் எலெக்ஷன் பிரசாரத்திற்குப் பயன்படுத்திக்கொள்ளாமலிருந்தால் நன்றாக இருக்கும். பஸ் முதலாளிகள், சினிமா நடிகர்கள், இரும்பிலிருந்து தயாரிப்பவர்கள் இவர்களிடம் Black money ஏராளமாக இருக்கிறது. Black money வெளிவருவதற்கு நாம் திட்டம் வகுத்தாலொழிய, கோடிக்கணக்கான ரூபாய், மக்கள் பணம், முடக்கித்தான் இருக்கும் என்று சொல்லிக்கொள்கிறேன். இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தை ஆதரித்து, என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

* SRI K. M. RAMASAMY GOUNDER: மதிப்பிற்குரிய அவைத் தலைவர் அவர்களே, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தைத் தொடர்ந்தே மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம், கோடிக் கணக்கான ரூபாய்களுக்கு, வகுக்கப்படுகிறது. இதில் சென்னை சர்க்காரின் பங்கே 400 கோடி ரூபாய் என்று சொல்லப்படுகிறது.

(Deputy Chairman in the Chair.)

இந்த 400 கோடி ரூபாயை சென்னை சர்க்கார் வரியாகவும், நன்கொடையாகவும், கடனாகவும் பெறக்கூடும். தனியார் துறையிலிருந்து வரக்கூடிய கோடிக்கணக்கான ரூபாய், மத்திய சர்க்கார் கொடுக்கும் மானியத் தொகை ஆகியவைகளெல்லாம் சேர்ந்து நாட்டில் கோடிக்கணக்கான அளவில் பணம் புழங்கும். இதனால் ஜனங்களின் சுபிட்சமும் வருவாயும் அதிகரிக்கிறது, விலைவாசி உயர்வு இருக்கத்தான் செய்யும். விலைவாசி விஷம்

போல் ஏறுதபடி தடுப்பதற்காக என்னென்ன செய்ய வேண்டும் என்று யோசிக்கும்போது விலைக் கட்டுப்பாடு வேண்டும் என்று சிலர் சொல்லுகிறார்கள். மதிப்பிற்குரிய நமது பிரதமர் அவர்களே சில பண்டங்களிலாவது சர்க்கார் வியாபாரம் இருக்க வேண்டும் என்று சொல்லியிருக்கிறார்கள். சர்க்கார் வியாபாரமோ, விலைக் கட்டுப்பாடோ எத்தனை பண்டங்களில் இருக்க முடியும்? அடிக்கடி அரிசிக்கும், நெல்லுக்கும் தான் விலைவாசிக் கட்டுப்பாடு வருகிறது. உணவுப் பண்டங்களிலேயே பருப்பு, புளி போன்றவைகளுக்கு விலைவாசிக் கட்டுப்பாடு கொண்டு வருவது முடியாத காரியமாக இருக்கிறது. எனவே பண்டங்களை நிறைய உற்பத்தி செய்யவேண்டும். உணவுப் பொருள்கள், துணி, இயற்கைப் பொருள்கள், செயற்கைப் பொருள்கள் ஆகிய எல்லாப் பொருள்களையும் வேண்டிய அளவு உற்பத்தி செய்தால் விலைவாசி உயர்வை ஓரளவு தடுக்க முடியும்.

அவ்வாறு இன்றி திடீரென்று ஒரு கட்டுப்பாட்டிலே இறங்கி விட்டால் சங்கடத்திற்கு இடமாகிவிடுகிறது—கட்டுப்பாட்டை முன்னரே பார்த்திருக்கிறோம்—முன்னதாக அது பல பேருக்குப் பலவிதக் கஷ்டங்களைக் கொடுத்திருக்கிறது. திட்டத்திற்குப் பணத்தைக் கண்டுபிடிப்பதை எடுத்துக்கொள்வோம். நேர்முக வரி நல்லதா, மறைமுக வரி நல்லதா? மறைமுக வரி போடுவதால் பெரும்பாலும் ஏழை மக்கள்தான் பாதிக்கப்படுகிறார்கள். சாதாரணமாக மறைமுக வரியானது, மத்திய சர்க்காரிடம் excise வரியாக இருந்தாலும் சரி, அல்லது ராஜ்ய சர்க்கார் விற்பனை வரியாக இருந்தாலும் சரி, ஏழை மக்கள் வாங்குகிற ஒவ்வொரு பண்டத்துக்கும் வரியாக ஏற்பட்டு ஏழைகளின் செல்வ நிலையைக் குறைக்கிறது. எந்த வரியாக இருந்தாலும் கூட மிகவும் யோசித்தே செய்ய வேண்டும். அதிலும் மறைமுக வரியை முற்றிலும் கைவிட்டு வருமான வரி போன்ற நேர்முக வரிகளை விதித்துச் செல்வந்தர்களுக்கு, அதிக வரியும், ஏழைகளுக்கு வரி இன்மையும் என்ற முறையைச் சர்க்கார் கைக்கொள்ள வேண்டும். அடுத்தபடியாக இந்த நாற்பது கோடி ரூபாயில்—கனம் அங்கத்தினர் ஸ்ரீ ரசாகான் அவர்கள் கொடுத்த திருத்தத்திலுள்ள ஐந்து பெரிய திட்டங்களையும் எடுத்துக்கொண்டால், பெரும் பகுதி செலவழிந்துவிடும். அவை முக்கியமான திட்டங்கள், அவசியம் செய்ய வேண்டியவை, செய்ய வேண்டுமென்றுதான் கூறுகிறோம். அந்தக் காலத்திலேயே "சேதுவை மேடுறுத்தி வீதி சமைப்போம், சிங்களத் தீவினுக்கோர் பாலம் அமைப்போம்" என்று கவி பாரதியார் பாடிக் காட்டி அன்று முதல் நாம் கண்டுகொண்டிருக்கும் கனவு நினைவு ஆக வேண்டியதுதான். அத்தோடு சிறு சிறு தொழில்களையும் வளர்த்து கிராமங்கள் முன்னேற வழி செய்ய வேண்டும். கிராமத்திலே வாழ்க்கை வசதி மிக நன்றாக அமைய வேண்டும். குடிதண்ணீர் வசதி, மருத்துவ வசதி, போக்கு வரத்து வசதி, கல்வி வசதிகள் ஆகிய வசதிகளை எல்லாம், நகரங்களுக்கு உள்ளன போன்று கிராமங்களுக்கும் ஓரளவு சரிநிகர் செய்ய முடிந்த யாவற்றையும் சிறுகச் சிறுகவாவது செய்து கிராமங்களை

எல்லா வசதிகளும் உள்ள இடமாக மாற்றவேண்டும். அங்கே மருத்துவ வசதிகளுக்கு என்று Primary Health Centres ஏற்படுத்துகிறார்கள். ஆனால் டாக்டர்கள் வருவதில்லே. டாக்டரே வந்தாலும் அவருக்கு எல்லா வசதிகளும் கிடைப்ப தில்லே. கல்வி வசதி செய்கிறார்கள். 300 பேர் ஜனத்தொகை உள்ள கிராமத்துக்கு ஒரு பள்ளிக்கூடம் என்கிறார்கள். பயிற்சி பெற்ற ஆசிரியர்கள் கிடைப்பதில்லே. செய்கிற காரியங்களேச் செம்மையாகச் செய்ய வேண்டும். மெதுவாகக் காரியம் நடைபெறுவதானாலும் பாதகமில்லே. நாம் செய்கிற ஒவ்வொரு காரியத்தையும் பணம் விரயம் ஆகாமல் வீணாக்கப்படாமல் பயனளிக்கும் வகையில் செய்துகொண்டே போக வேண்டும் போக்குவரத்து வசதி என்றால் ரோடு போட்டுவிட்டால் மட்டும் போதாது. ரோடு போடுவதோடு, நகரத்தோடு தொடர்பு கொள்வதற்கு வேண்டிய பஸ் போக்குவரத்து வசதிகள் வேண்டி யிருக்கிறது. இதை எல்லாம் கவனித்து வேண்டிய வசதிகளே அவ்வப்போது செய்ய வேண்டும். நாட்டுப்புறம் முழுமையிலும் பஞ்சாயத்துக்களும், பஞ்சாயத்து யூனியன்களும் செயல்படும் முறையிலே நேர்முகமாக வருங்காலத் திட்டங்கள் சென்னே சர்க்காராலோ டெல்லி சர்க்காராலோ திணிக்கப்பட்ட திட்டங்கள் அல்லாது, அந்தந்த கிராம லெவலிலே கிராம அடிப்படையிலே எடுத்துக்கொள்ளும் திட்டங்களாக அமையப் போகின்றன. பஞ்சாயத்து வரிப்பணம், மக்கள் நன்கொடை, ஒத்துழைப்பு இவை எல்லாம் வருங்காலத்தில் மிக அதிகமாகக் கிடைக்கும். அந்த அளவிலே இந்த 5-ஆண்டுத் திட்டத்தைப் பெரிதாக நடத்த வேண்டும். அரசாங்க அதிகாரிகளின் மனப் பண்பு மிக நன்றாக இருக்க வேண்டும். காவிரித் தண்ணீரை சென்னேக்குக் கொண்டுவந்தால் வழியிலுள்ள கிராமங்களுக்கும் தவறாமல் கொடுக்க வேண்டுமென்று சொல்கிறோம். அதுவே சர்க்காரின் தொடர்ந்த Policy -யாக இருக்கிறது என்று சொல்லுகிறார்கள். ஆனால் நடை முறையில் அந்த Policy யை எடுத்துக் கையாளும் அதிகாரிகள் குறைவு. கோபிசெட்டி பாளேயத்துக்குத் தண்ணீர் குழாயில் கொண்டுவரப்பட்டது. வழியிலுள்ள கிராமங்கள் கவனிக்கப்படவில்லே. குழாய்த் தண்ணீர் போன்ற வசதிகள் கிராமங்களுக்கு வேண்டும். வரும் வழியில் உள்ள கிராமங்களுக்கு குழாய்த் தண்ணீர் கொடுக்க முயற்சித்தால் கிராமங்களில் ஒரு நல்ல தண்ணீர் வசதி ஏற்பட்டு உத்தியோகஸ்தர்கள் முதற்கொண்டு பலதரப்பட்ட மக்கள் தங்க வசதி ஏற்படும். இரண்டாவது திட்டத்திலே ரயில் பாதையைப் பொறுத்த வரையில் நம் ராஜ்யம் மிகமிகக் குறைந்த அளவுதான் கவனிக்கப்பட்டு இருக்கிறது. 150 கோடி ரூபாய் செலவில் 1 கோடி ரூபாய்கூட நமக்கு வரவில்லே. ரயில் பாதை புதிதாக அமைக்கப்படவோ இருக்கின்ற பாதைகள் விரிவு படுத்தவோ சீர்திருத்தப்படுத்தவோ பணம் செலவழிக்கப்பட வில்லே. சத்தியமங்கலம்-காமராஜ நகர் புதிய ரயில் பாதை இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இருக்கிறது. அந்தக் திட்ட காலத்திலேயே வேலே துவக்கும் சமயம் வாய்க்கும் என்று எதிர்பார்க்கப்பட்டது. இப்போது 3-வது ஐந்தாண்டுத்

9th September 1960] [Sri K. M. Ramasamy Gounder]

திட்டத்திலே இருக்கிறதா இல்லையா என்று சொல்ல முடிய வில்லை. 50, 60 வருஷத்துக்கு முன்னமேயே ஒரு முக்கியமான திட்டமாக இருந்தது. மைசூர், சென்னை ராஜ்யங்களை இணைக்கக் கூடியது. கொச்சித் துறைமுகத்துக்கு மத்திய இந்தியாவிலிருந்து, ஆந்திரப் பிரதேசத்திலிருந்து வர மிகக் குறைந்த தூரமுள்ள அருகிலுள்ள திட்டம். இந்தத் திட்டம் மிக முக்கியமானது. உடனடியாக எடுத்துக் கொள்ளப்பட வேண்டிய திட்டம். பெரிய திட்டங்களுக்கு அடுத்த அவசியத்தை அதற்கு ஏற்படுத்தி இப்படிப்பட்ட, முக்கியமான 2-ஆம் ஐந்தாண்டுத் திட்டத்திலேயே இந்த ராஜ்யத்துக்கு கிடைத்திருக்க வேண்டிய இந்தத் திட்டம் நல்ல முறையில் 3-ஆம் திட்டகாலத்திலே அமைக்கப்படவேண்டிய ஏற்பாடுகளைச் சென்னை சர்க்கார் செய்து ஆவன யாவும் புரியவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

Sri S. K. SAMBANDHAN: கனம் உப தலைவரவர்களே, இந்த இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் மூலம் நமது நாடு முன்னேற்றம் அடைந்திருக்கிறது என்பதிலே எவரும் மறுப்புச் சொல்ல முடியாது. இருந்தபோதிலும் இந்த முன்னேற்றத் தினாலே இப்போது இருக்கும் மக்களுக்கு எவ்வளவு தூரம் அனுகூலம் கிடைத்திருக்கிறது என்பதைப்பற்றிக் கொஞ்சம் சந்தேகப்பட வேண்டித்தானிருக்கிறது. இந்தத் திட்டங்கள் எல்லாம் முன்பேசிய கனம் அங்கத்தினர் சொல்லியதுபோல் பிற்கால சந்ததிகளுக்கு அதிகமாக நன்மை பயக்கக்கூடியதாக இருக்கின்றனவே ஒழிய இப்போதுள்ள மக்களுக்கு—நமக்கு அதிகமாகப் பயன் தரக்கூடியதாக இல்லை என்பதை ஒப்புக் கொள்ள வேண்டியதுதான். வாழ்க்கைத் தரத்தை எடுத்துக் கொண்டால், இன்று பணப்புழக்கம் அதிகமாக இருப்பதால் வாழ்க்கைத் தரம் உயர்ந்துவிட்டது என்று சொல்ல இடமில்லை. அந்த அளவுக்குப் பல ஆண்டுகளுக்கு முன்னால், 20 ஆண்டு களுக்கு முன்னால் எந்த வாழ்க்கையை நடத்தினார்களோ கிட்டத் தட்ட அதே வாழ்க்கையைத்தான் இன்று சகல மக்களும் நடத் திக்கொண்டு வருகிறார்கள் என்று சொன்னால் மிகையாகாது. அவர்களின் வாழ்க்கையில் எந்த விதமான முன்னேற்றமும் இல்லை என்று சொல்லத்தான் வேண்டியிருக்கிறது. அந்த வாழ்க்கைத் தரத்தை—சாதாரண மக்களின் வாழ்க்கைத் தரத்தைத் திருத்தி, முன்னேற்றத்துக்கு வளப்படுத்துவதற்கு அரசாங்கம் திட்டமிட்டுச் செய்யவேண்டும் என்று சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். அவர்களின் முன்னேற்றத்துக்கு என்னென்ன செய்யவேண்டுமோ அதிலே அக்கறை காட்ட வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். பெரிய தொழிற் சாலைகள் தமிழ் நாட்டிலே, சென்னை மாகாணத்திலே இல்லை என்றாலும் எல்லோரும் குறிப்பிட்டதுபோல் எங்கள் மாவட்டத்திலே நெய்வேலித் திட்டம் நடத்தப்படுவதால் நாங்கள் எல்லோரும் சந்தோஷமாக அதை வரவேற்கிறோம். அது குறிப்பிட்ட காலத்தோடு முன்னேறவில்லை என்ற போதிலும், அப்போது முன்னேறிக்கொண்டு தான் வருகிறது. அதனால் அந்தப் பக்கத்திலே பணப் புழக்கம் அதிகமாகி ஒருவித

4-20 p.m.

[Sri S. K. Sambandhan] [9th September 1960

சங்கடம் ஏற்பட்டிருக்கிறது என்றுகூடச் சொல்லலாம். இருந்தபோதிலும் அது சம்பந்தமாக ஒரு விஷயம் சொல்லிக் கொள்கிறேன். சேலத்தில் இரும்புக்கனி இருப்பதைக்கொண்டு இரும்புத் தொழிற்சாலே ஏற்படுத்துவதுபோல் தென் ஆற்காட்டிலும் நெய்வேலியில் ஒரு இரும்புத் தொழிற்சாலே சிறு அளவிலாவது, நெய்வேலி நிலக்கரி சேலத்துக்கு அனுப்பப் படும்போது சேலத்திலிருந்து திரும்ப கொஞ்சம் இரும்பு கொண்டுவந்து அமைக்க முடியும் என்று சொல்கிருர்கள். அந்தமாதிரி இரண்டு இரும்புத் தொழிற்சாலேகள் நமது மாநிலத்தில் ஏற்பட ஆவன செய்ய வேண்டுமென்று கனம் தொழில் அமைச்சரைக் கேட்டுக்கொள்கிறேன். ஏனென்ருல் நெய்வேலியைத் தவிர வேறு எந்தப் பெரும் தொழிலும் கிடையாது. இந்த ஒரு வாய்ப்புத்தான் இருக்கிறது. இரும்புத் தொழிற்சாலேயை ஆரம்பிக்கவேண்டும் என்று கனம் அமைச்சரவர்களேக் கேட்டுக்கொள்கிறேன்.

மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில், தேசீய விஸ்தரிப்புத் திட்டங்களின்கீழ் பல கோடி ரூபாய்கள் ஒதுக்கப்பட்டிருக் கின்றன. இது மிகவும் வரவேற்கத்தக்கதுதான். செலவிடப் படும் பணம் சரியான வழியில், மக்களுக்குப் பயன்படும் வழியில் செலவிடப்படுகிறதா என்று அரசாங்கம் அடிக்கடி கவனிக்க வேண்டும். ஒரு கோடி ரூபாய் செலவிடப்படும்போது அதில் 50 கோடி ரூபாயோ அதற்கும் மேலோ "எஸ்டாப்ளிஷ் மெண்ட்"-க்காகச் செலவிடப்பட்டால் மக்களுக்குப் பயன் ஏற் படாது. இந்த மாதிரியான செலவுகளில் சிக்கனத்தைக் கடைப் பிடித்து, மக்களுக்குப் பயன் ஏற்பட வேண்டுமானுல் செலவுகள் எவ்வாறு இருக்கவேண்டுமோ அவ்வாறு இருக்கும்படி செய்ய வேண்டுமென்று கனம் அமைச்சரைக் கேட்டுக் கொள்கிறேன்.

கல்வித் துறையை எடுத்துக்கொண்டால், 7 வயது முதல் 14 வயது வரையில் குழந்தைகளுக்குக் கட்டாயப் படிப்பு அளிக்க அரசாங்கம் முன்வந்திருப்பது மிகவும் வரவேற்கத்தக்கது. நாம் மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்திலாவது உயர்நிலேப் பள்ளி நிலேயில் கட்டாய இலவசக் கல்வித் திட்டத்தைக் கொண்டுவந் திருந்தால் அது மிகவும் வரவேற்கத்தக்கதாக இருக்கும். ஏனென்ருல், நமது நாட்டில் உயர்நிலேப் பள்ளிக் கல்வி அளவி லாவது எல்லோருக்கும் கல்வியறிவு அவசியமாக இருக்கிறது. எந்தத் தொழில் செய்பவர்களுக்கும் அந்த அளவு கல்வி அவசிய மாக இருக்கிறது. எனவே அந்த அளவு கல்வியாவது எல்லோருக்கும் அளிக்க அரசாங்கம் முற்பட வேண்டும் என்று சொல்லிக்கொள்கிறேன்.

சுகாதாரத் துறையில் பல கோடிக்கணக்கான ரூபாய்கள் செலவழிக்கத் திட்டமிடப்பட்டிருக்கிறது. இதுவிஷயத்தில் ஒன்று மட்டும் சொல்ல விரும்புகிறேன். இப்போது கிராமங் களில் பல சிறு ஆஸ்பத்திரிகள் இருந்தாலும், அவைகளுக்கு வருடத்திற்கு 1,000 ரூபாயிலிருந்து 2,000 ரூபாய் வரையில் தான் மருந்து கொடுக்கப்படுகிறது. ஜில்லா போர்டு ஆஸ்பத்திரி களுக்குப் போதிய அளவு மருந்து கொடுக்கப்படுவதில்லே. இந்த

9th September 1960] [Sri S. K. Sambandhan]

நிலையில் பல கிராமங்களுக்குப் போதிய அளவு மருந்து இல்லை. எனவே இந்த ஆஸ்பத்திரிகளுக்குப் போதிய அளவு மருந்துகள் கொடுக்க ஆவன செய்ய வேண்டுமென்று கனம் அமைச்சரைக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, முக்கியமான தொழிலாகிய கைத்தறித் தொழிலைப்பற்றி ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். கனம் அங்கத்தினர் ஸ்ரீ பொன்னுசாமி செட்டியார் இந்தத் தொழில் சம்பந்தமாக விரிவாகப் பேசினர். கைத்தறித் தொழிலுக்கு அரசாங்கம் இதுவரை செய்துவந்துள்ள உதவி களுக்காக, ஏழை நெசவாளர்களின் சார்பில் அரசாங்கத்தைப் பாராட்டுகிறேன். கூட்டுறவுச் சங்கங்களில் இல்லாத நெசவாளர் களுக்கு, முக்கியமாக மாஸ்டர் வீவர்களுக்கு உதவி அளிப்பதற் காக ஒரு கார்ப்பரேஷன் ஏற்படுத்த 25 லட்ச ரூபாய் ஒதுக்கி வைத்திருப்பது மிகவும் பாராட்டத் தக்கது. இந்த 25 லட்ச ரூபாய் மிகவும் குறைவானத் தொகைதான். கைத்தறிக்காகக் கிட்டத்தட்ட 11 கோடி ரூபாய் செலவிடும் இடத்தில் கடன் வசதிக்காக 25 லட்சம் ரூபாய் ஒதுக்குவது என்ருல், இது மிக மிகக் குறைவான தொகை. இதை இன்னும் அதிகப்படுத்த வேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன். அடுத்த படியாக, கூட்டுறவுச் சங்கங்களில் உள்ள நெசவாளர்களுக்காக வீடு கட்டும் திட்டத்தையும் இதர திட்டங்களையும் நிறைவேற்று கிருர்கள். தனிப்பட்ட நெசவாளர்களுக்காகவும் இந்த மாதிரியான திட்டங்களை நிறைவேற்ற வேண்டும். தனிப்பட்ட நெசவாளர்களுக்காக வீடு கட்டும் திட்டத்தையாவது நடத்தி அவர்களுக்கு உதவ வேண்டும் என்று சர்க்காரைக் கேட்டுக் கொள்கிறேன். ஏனென்ருல், பல கிராமங்களில் பல நெசவாளர்கள், கூட்டுறவுச் சங்கத்திலும் சேராமல், மாஸ்டர் வீவர்களிடத்திலும் இல்லாமல், தாங்களாக, தங்களிடம் இருக்கும் 20, 30 ரூபாயை வைத்துக்கொண்டு தொழில் செய்து தறிகள் பிழைப்பை நடத்தி வருகிருர்கள். அப்பேர்ப்பட்டவர் களுக்கு ஏன் வீடு கட்டும் திட்டம் கொண்டு வரக்கூடாது என்று அரசாங்கத்தைக் கேட்க விரும்புகிறேன்.

கைத்தறித் தொழிலில், நூற்பு யூனிட்டுகள் பல கிராமங் களுக்கு விஸ்தரிக்கப்படுகின்றன என்று தெரிவிக்கப்பட்டிருக் கிறது. இவ்வாறு செய்யும்போது இன்னும் ஆயிரக்கணக்கான யூனிட்டுகளைக் கொடுக்கவேண்டுமென்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்கிறேன்.

பவர் லூம்கள் கொண்டுவருவதைப்பற்றி ஸ்ரீ பொன்னுசாமி செட்டியார்கூடக் குறிப்பிட்டார். கைத்தறித் தொழிலில் அதிக அக்கறையுள்ளவர்கள் எல்லோரும் விசைத் தறிகள் கொண்டு வருவதை எதிர்க்கிருர்கள். விசைத் தறிகளை அவர்களும் நானும் எதிர்ப்பது, விசைத் தறி கூடாது என்ற "மேனியா"-வில் இல்லை. நாங்கள் விசைத் தறிகளின் எதிரிகள் அல்ல. விசைத் தறியைப் புகுத்தினுல் எப்படி கைத்தறித் தொழிலுக்கு உதவ முடியும் என்ற காரணத்தால் தான் விசைத் தறியை நாங்கள் எதிர்க்கிருேம். விசைத்தறியைப் புகுத்தினுல் கைத்தறிக்கு

[Sri S. K. Sambandhan] [9th September 1960

எப்படி உதவி செய்ய முடியும் என்ற கேள்விக்கு பதிலிறுக்காமல், விசைத் தறியை ஏராளமாகப் புகுத்த வேண்டும் என்று அரசாங்கம் சொல்வது வருந்தத்தக்கது; வருந்தத்தக்கது மட்டுமல்ல, கண்டிக்கவும் தக்கது. விசைத் தறியைப் புகுத்து வதைப் பெரும்பான்மையானவர்கள் இன்னும் வரவேற்க வில்லை. உண்மையில், விசைத் தறிகளைப் புகுத்துவது கைத்தறித் தொழிலுக்கே ஆபத்தானது என்று சொல்லிக்கொள்ள விரும்பு கிறேன்.

கனம் அமைச்சர் தமது பட்ஜெட் பேச்சின்போது கைத்தறித் துணிகள் எவ்வளவு குறைவான விலையுள்ளதாக இருந்தாலும் விற்பனையாவதில்லை என்று கூறினார். நான் அதை அப்போதே மறுத்தேன். அத்துடன், நான் மார்க்கெட்டுக்குச் சென்று ஆலை வேஷ்டியின் விலையையும் கைத்தறி வேஷ்டியின் விலையையும் விசாரித்தேன். ஆலை வேஷ்டிகள் ஒரு ஜோடி சுமார் 16 ரூபாய், 17 ரூபாய் விலையில் இருந்தன. அவைகளில் ஒரு ஜோடியை கனம் அமைச்சருக்குக் காட்டுவதற்காக வாங்கினேன். கோவை மில் வேஷ்டி ஒன்று ரூபாய் 7.65, 7.50 விலையில் இருந்தது. ஒரு குறிப்பிட்ட நூலிலான துணி எங்கும் இல்லை. காரணம் அந்த நூல் மிகவும் கிராக்கியாக இருந்தது. இது சம்பந்தமாக அம்மாப்பேட்டையிலுள்ள கைத்தறித் தொழிலாளர் சங்கத் தலைவர் ஸ்ரீ ஏ. மாரியப்பன், எம்.எல்.ஏ.-யிடம் விசாரித்தேன். அவர் எனக்கு விவரங்களைத் தெரிவித்தார். எனவே, கைத்தறித் துணிகள் விற்பனையாக வில்லை என்று கனம் அமைச்சர் அன்று சொன்னதற்குக் காரணம் என்னவென்றால், கைத்தறித் துணிகள் மில் துணிகளை விட கிராக்கியான விலையில், அதிகமான விலையில் விற்கின்றன
4-30 p.m. என்று அவர் எண்ணியிருக்கக்கூடும். அவர் அவ்வாறு சொன்னதை மறுப்பதற்காகத்தான் மார்க்கெட்டுக்குச் சென்று இந்தத் துணிகளின் விலைகளை விசாரித்தேன். இந்த சந்தர்ப்பத்தில் ஆகஸ்டு 11-ம் தேதி வியாழக்கிழமை, வெளிவந்த ஒரு பேப்பர் ரிப்போர்ட்டை தங்கள் அனுமதியுடன் வாசிக்க விரும்புகிறேன். அந்தப் பேப்பர் ரிப்போர்ட்டில் பின் வருமாறு எழுதப்பட்டிருக் கிறது:—

"Usually in June and July, because of the marriage season and re-opening of colleges and schools the cloth offtake is always brisk. But this year, because of the high prices of cloth, particularly coarse and medium varieties, trading was featureless, the price increases in Madras ranging from 25 per cent to 30 per cent.

Traders feel that there is no immediate prospect of a reduction in the accumulated cloth stocks.

Arrivals from North Indian centres were very meagre. Prices of sheeting, canvas, carpets, drill, towels, etc., are now ruling high, because of the high prices of coarse and medium yarn. Trading in handloom cloth also is dull, because of the high prices of cotton yarn."

9th September 1960] [Sri S. K. Sambandhan]

எனவே, கைத்தறித் துணி விற்பனை குறைவாக இல்லை என்று கூற விரும்புகிறேன். கைத்தறித் துணிக்கு இப்போது அதிகமான கிராக்கி இருப்பதால் விசைத் தறியைப் புகுத்தக் கூடாது என்று சொல்ல விரும்புகிறேன். விசைத் தறிகளைப் புகுத்த வேண்டு மென்றால், அவைகளைப் புகுத்தினால் கைத்தறித் தொழிலாளர் களுக்கு வேறு வேலை கிடைக்குமா, வேறு வேலை கொடுக்க முடியுமா என்று ஆலோசித்து, அவர்களுக்கு வேறு வேலைக்கு ஏற்பாடு செய்து விட்டே விசைத் தறிகளைப் புகுத்த வேண்டும் என்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்கிறேன். இத்துடன் என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

Sri V. M. SURENDRA RAM: அவைத் தலைவர் அவர்களே, சர்க்கார் எடுத்துக்கொண்டிருக்கும் இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தை ஒட்டிச் சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். இப்போது இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களுக்குப் பிறகு நமது நாடு பல துறைகளிலும் முன்னேறி இருக்கிறது. அதைப் போலவே மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலும் நாடு முன்னேற வேண்டும் என்று மக்கள் அனைவருக்கும் அவா. இப்போது எங்கள் ஜில்லாவைப் பொறுத்தவரை சில வார்த்தைகள் பேச இருக்கிறேன். எங்கள் ஜில்லாவுக்கு Queen of the Hill Stations என்று பெயர். அங்கே queen கிடையாது king-ம் கிடையாது. காரணம் மாஜி ராஜாக்கள் இருக்கிறார்களே, அதே மாதிரித் தான் நாங்களும் ஆகிக் கொண்டிருக்கிறோம். பழைய மாதிரி Queen of the Hill Stations மாதிரி இருக்க வேண்டு மென்றால் எங்கள் ஜில்லாவில் புதிய கைத்தொழில்களை ஏற்படுத்த வேண்டும். அப்படியானால்தான், நீலகிரி ஜில்லா வுக்கு Queen of the Hill Stations என்ற பெயர் ஒத்ததாக இருக்கும். ஆகையினால் சர்க்கார் இந்தத் திட்டத்தில் ஆரம் பிக்கப்போகிற கைத்தொழில்களில் எந்தெந்த கைத்தொழிலை நீலகிரி ஜில்லாவில் ஆரம்பிக்க முடியுமோ அதை ஆரம்பிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். எங்களுக்குப் பக்கத்தி லிருக்கும் கோவையில் எவ்வளவோ தொழில்கள் இருந்தும், கனம் அங்கத்தினர் ஸ்ரீ S. R. P. பொன்னுசாமி செட்டியார் இன்னும் கைத்தொழில் வேண்டுமென்று கேட்கிறார். கைத்தொழில் இருந்தால்தான் நாடு முன்னேறும் என்ற அடிப் படையில் கேட்கிறார்கள். அதேபோலத்தான் எங்கள் ஜில்லா. எங்கள் ஜில்லாவில் ஒரு கைத்தொழிலும் கிடையாது. தொழிற்சாலை ஒன்றே ஒன்று வர இருக்கிறது. அதைக் கண்போல வைத்திருக்கிறோம். அதுதான் கச்சாபிலிம் தொழிற்சாலை. அதற்கு இப்போதுதான் இடம் கிடைத்திருக் கிறது. இதுவரை தகுந்த இடம் கிடைக்க வில்லை என்று சொல்லிக்கொண்டிருந்தார்கள். அங்கே மேலும் பல கைத்தொழில்களை ஆரம்பிக்க ஏதுவாக இருக்கிறது. ஒரு ஆட்டுப் பண்ணை நடத்த இருக்கிறார்கள். சர்க்கார் தரப்பில் நல்ல நிலைமையில் இருக்கிறது, வென்லாக் டவுன்ஸ் என்ற 19,000 ஏக்கர் நிலப்பரப்பில். அங்கே ஆட்டுப்பண்ணை—கால்நடை வளர்க்க நல்ல சௌகரியம் இருக்கிறது. ஆகையினால்

[Sri V. M. Surendra Ram] [9th September 1960

இப்போது வெளி நாட்டிலிருந்து வரக்கூடிய, வெளி நாட்டில் செய்யப்படும் கம்பளம் தயார் செய்யக் கூடிய தொழிற்சாலையை நீலகிரியில் ஆரம்பித்தால் இந்த ஆட்டுப் பண்ணை வளர்ப்பதற்கும் குளிர்ப்பிரதேசமாக இருப்பதால் சூடான கம்பளம் வேண்டியிருப்பதால் அதை ஆரம்பித்தால் நல்ல நிலைமையில் இருக்கும் என்று சொல்லப் பிரியப்படுகிறேன். அதே போல இந்த ஐந்தாண்டுத் திட்டத்திலே பால் பண்ணை ஆரம்பிக்க வேண்டும் என்று சொல்லி ஒரு பெரிய தொகையை ஒதுக்கி யிருக்கிறார்கள். நீலகிரி ஜில்லாவில் நல்ல மாடுகள் வளர்க்க சௌகரியம் இருந்தும் அந்த மாடுகளை வெளி ஜில்லாவுக்கும் பக்கத்து மாகாணம் ஆகிய மைசூருக்கும் அனுப்பி விடுகிறோம். காரணம் என்னவென்றால் உற்பத்தியாகும் பாலுக்குப் போது மான அளவுக்கு மார்கெட் கிடைக்கவில்லை. நாங்களே தான் அவ்வளவு பாலையும் சாப்பிட வேண்டியிருக்கிறது. எவ்வளவு தான் எங்களால் சாப்பிட முடியும்? ஆகவே மாடுகளை விற்றுவிடுகிறார்கள். மதராசிலும் மற்ற இடங்களிலும் பால் பவுடரும் பாலிலிருந்து பைபிராடக்ட்ஸும் உற்பத்தி செய்கிறார்கள். வென்லாக் டவுன்ஸ் என்ற 19 ஆயிரம் ஏக்கர் நிலத்தில் சர்க்கார் பெரிய மாட்டுப் பண்ணையை ஆரம்பித்தால் மற்ற இடங்களை எதிர்பார்க்காத அளவுக்கு அமெரிக்கா போன்ற இடங்களிலிருந்து வரும் பால் பவுடரை நீலகிரி ஜில்லாவில் செய்யலாம். பால் பைபிராடக்ட்ஸும் செய்யலாம். அதற்குத் தொழிற்சாலை ஏற்படுத்த வேண்டுமென்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ளுகிறேன். Forests தலைப்பின் கீழ் பல ஆயிரக் கணக்கான ஏக்கரில் மரம் நடத் திட்டமிட்டிருக்கிறார்கள் சர்க்கார். இப்போது 25 ஆயிரம் ஏக்கர் நிலத்தில் சவுக்கு, கற்பூர மரம் முதலியன நட ஏற்பாடு பண்ணியிருக்கிறார்கள். Wattle tan liquor என்ற எண்ணெயை எடுத்துத் தோல் பதனிட உபயோகிக்கிறார்கள். அந்தத் தொழிற்சாலை இந்தியாவில் எங்குமே கிடையாது. நீலகிரியில் Wattle நன்றாக வளர்வதால், அது இப்போது 20 ஆயிரம் ஏக்கரில் பயிரிடப்பட்டு நல்ல நிலையில் இருக்கிறது. இந்த ஐந்தாண்டுத் திட்டத்தில் 23 ஆயிரம் ஏக்கரில் இந்த wattle-ஐ plant செய்ய ஏற்பாடு செய்திருக்கிறார்கள். இந்தியா விலேயே இல்லாத தொழிற்சாலையை நீலகிரியில் ஏற்படுத்தினால் நமது மாகாணத்துக்கும் குறிப்பாக எங்கள் ஜில்லா முன் னேற்றத்துக்கும் வசதியாக இருக்கும் என்று சொல்லி அந்தத் தொழிற்சாலையை ஆரம்பிக்கும்படி சர்க்காரைப் பணிவுடன் கேட்டுக்கொள்கிறேன். எங்கள் ஜில்லாவில் ஆரம்பிக்கக் கூடிய தொழிற்சாலைகளை ஆரம்பித்தால், எங்கள் ஜில்லா முன் னேற்றம் அடைய ஏதுவாகும். அடுத்தது—மண் அரிப்புத் தடுப்புத் திட்டம்—soil conservation மலை நாடாகிய நீலகிரியில் இது அதிகம். எங்கள் ஜில்லாவைச் சுற்றி பெரிய பெரிய திட்டங்கள் இருக்கின்றன. பைகாரா, குந்தாத் திட்டம், லோயர் பவானித் திட்டம் எங்கள் ஜில்லாவிற்குப் பக்கத்தில்தான் இருக்கின்றன. மண் அரிப்பினால் சர்க்காருக்குக் கோடிக்கணக் கான ரூபாய் பாழாகிறது. எங்கள் ஜில்லாவிற்கு ஒரு திட்டமும்

9th September 1960] [Sri V. M. Surendra Ram]

இல்லே. நாங்கள் கரண்ட் உற்பத்தி பண்ணினுல்தான் மற்ற ஆலேகள் ஓடும். நாங்கள் எல்லாவற்றையும் தானம் பண்ணி விட்டுப் பிச்சைக்காரர்களாகப் போகக் கூடாதே என்று தான், எங்கள் காரண்ட்-ஐக் கொடுக்கிறேம். இந்தத் திட்டங்கள் எல்லாம் எங்கள் ஜில்லாவுக்குப் பாதகமாக இருக்கின்றன. குந்தா, பைகாரா, லோயர் பவானித் திட்டங்கள் ஆரம்பித்த பிறகு நிலங்களே விவசாயம் செய்யக் கூடாது என்று சட்டம் போட்டு விட்டார்கள். உருளேக்கிழங்கு விவசாயத்தை பண்ணிக்கொண்டு வருகிறார் கள். அதனுல் எங்களுக்கு நன்மை இல்லே. நாங்கள் பெரிய மனது வைத்து எல்லோரும் நன்றாக இருக்க வேண்டுமென்று உதவி செய்கிறேம் எங்களுக்குக் கைத்தொழில்கள் முதலியன வந்தால்தான் எங்கள் ஜில்லா முன்னேற்றம் அடைய முடியும். அங்கே நிறைய ஹரிஜனங்கள் இருக்கிறார்கள். முதலில் 10 வருஷம் சலுகை, இரண்டாவது 10 வருஷ சலுகை கொடுத் தார்கள். பெரிய அளவில் நாங்கள் முன்னேற்றம் அடைய வேண்டுமென்றல் திட்டங்கள் மாற்றம் அடையவேண்டும். சர்க்கார் நல்ல விதத்தில் திட்டம் வகுத்தால்தான் திட்டத்தினுல் முன்னேற்றம் அடைய முடியும். நாங்கள் முன்னேற்றம் அடைந் தால் நாடே முன்னேற்றம் அடைந்த மாதிரி இருக்கும். இந்த ஹரிஜனங்களுக்கு எந்தெந்த விதத்தில் உதவி செய்ய முடியுமோ அந்தந்த விதத்தில் உதவி செய்தால்தான் அவர்கள் முன் னேற்றம் அடைவார்கள். அதற்குத் திட்டமிட வேண்டும். நாங்கள் பஸ் ரூட் கேட்கிறேம். ஏனென்றல் ஒரு அங்கத்தினர் பேசினர். சினிமா, பஸ் தொழிலில்தான் ஜனங்களின் நாட்டம் இருக்கிறது. இவைகள் இருந்தால்தான் ஜனங்கள் பிழைக்க லாம் என்று நினைத்துக்கொண்டிருக்கிறார்கள். சர்க்காருக்குப் பணம் வருகிறது. நாங்களும பிரியப்படுகிறேம். சட்டங் களுக்கு விதி விலக்குப் பண்ணி எங்களுக்குச் சலுகை கொடுத்தால் நாங்கள் முன்னேற முடியும். ஹரிஜனங்களுக்கு அதிகமாகச் செய்ய வேண்டும். இங்கே பேச 5 நிமிடம்தான் கொடுத்திருக் கிறார்கள். ஒரு வருஷத்துக்கு ஒரு நிமிடம் என்று கணக்குப் போட்டிருக்கிறார்கள். இந்தச் சந்தர்ப்பம் அளித்ததற்குத் தலேவ ரவர்களுக்கு நன்றி செலுத்திக்கொள்கிறேன். 4 4 p

Sri M. ETHIRAJALU: கனம் உதவித் தலேவர் அவர்களே, இன்றுள்ள சர்க்கார் ஜனநாயக சமூக அடிப்படையில் நாட்டு மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தவும், வறுமை, ஏழ்மை ஆகிய பிணிகளே அகற்றவும் பொறுப்பு ஏற்றுக்கொண்டிருக் கிறது. இதையெல்லாம் திட்டங்களின் மூலம்தான் சாதிக்க முடியும் என்று அறிந்து சர்க்கார் ஐந்தாண்டுத் திட்டங்களே வகுத்து நிறைவேற்றி வருகிறார்கள். முதல் ஐந்தாண்டுத் திட்ட மும், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டமும் போடப்பட்டது. இப்போது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் போடப்படுகிறது. முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் இந்த மாநிலத்தில் 80 கோடி ரூபாயைச் செலவழித்து பெரிய பெரிய நீர்ப்பாசனத் திட்டங் களேயெல்லாம் பூர்த்தி செய்து விவசாயத் துறையில் ஒருவாறு முன்னேற்றம் ஏற்படச் செய்திருக்கிறார்கள். இரண்டாவது

[Sri M. Ethirajalu] [9th September 1960

ஐந்தாண்டுத் திட்டத்தில் சிறு கைத்தொழில்களையும், சிறு சிறு நீர்ப்பாசனத் திட்டங்களையும் ஏற்படுத்தியிருக்கிறோம். இவை களை யெல்லாம் செய்து நாட்டு மக்களின் தரத்தை ஓரளவுக்கு உயர்த்தியிருக்கிறோம். அந்த 1960–61-ஆம் ஆண்டில் 152 கோடி ரூபாய் செலவு செய்யப்படும். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நாம் இப்போது திட்டமிட்டுள்ளபடி 352 கோடி ரூபாயைச் செலவு செய்யப் போவதாகச் சொல்லியிருக்கிறோம். மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்காக நாம் திட்டங்கள் போட்டிருக்கிறோம். இந்தத் திட்டங்களை ஒருவாறு சரியாகப் போட்டு அமல் நடத்த இன்னும் ஓராண்டு காலம் இருக்கிறது. இந்தத் திட்டங்கள் எல்லாம் பூரணமாக வகுக்கப் பட்டு விட்டனவா, அல்லது இவை இன்னும் மறுபடி திருத்தி யமைக்கப்படுமா என்ற ஒரு சந்தேகம் எனக்கு இருக்கிறது. ஏனென்றால், சமதர்ம சமுதாயத்தை அமைக்க வேண்டும் என்று விரும்பும் நாம் இந்த நாட்டில் மிகவும் பின்தங்கிய நிலையில் இருக்கும் சமுதாயத்தினரின் கல்வித் தரத்தை உயர்த்தவும், பொருளாதார நிலையை உயர்த்தவும், உத்தியோகத் துறையில் அவர்களுடைய நிலையை உயர்த்தவும், இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஒருவிதத்திலும் வகை செய்யவில்லை என்பதுதான் என் தாழ்மையான அபிப்பிராயம். சோஷலிஸ சமுதாயம் அமைய வேண்டுமானால் அடித்தட்டில் இருக்கும் சமுதாயம் உயர வேண்டும். அடித்தட்டிலுள்ள சமுதாயத்தை உயர்த்தினால் தான், நாம் சோஷலிஸ சமுதாயத்தை அமைத்து விட்டதாகச் சொல்ல முடியும். இந்த நாட்டு மக்களின் வாழ்க் கைத் தரத்தை உயர்த்த வேண்டுமானால், விவசாயத்தை மட்டும் பெருக்குவதோ தொழில்களை மட்டும் பெருக்குவதோ போதாது. அத்தொழில்களில் சம்பந்தப்பட்டுள்ள தொழி லாளர்களின், பின்தங்கிய மக்களின், ஹரிஜனங்களின் வாழ்க் கைத் தரத்தையும் பொருளாதார நிலையையும் படிப்படியாக உயர்த்த வேண்டும். இன்றுள்ள நிலையில், உயர்ந்த நிலையி லுள்ள சமூகத்தினர் உயர்ந்துகொண்டே போகிறார்கள், தாழ்ந்த நிலையில் உள்ள சமூகத்தினர் தாழ்ந்த நிலையிலேயே இருக்கிறார்கள். பிற்பட்ட வகுப்பினருக்கு மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஒரு சலுகையும் காணப்படவில்லை. முதல் ஐந்தாண்டுத் திட்டத்திலும் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலும் முறையே 5 கோடியே 62 லட்ச ரூபாயும், 15 கோடியே சொச்சம் ரூபாயும் பிற்பட்ட மக்களின் கல்விக் காகவும் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 16 கோடியே சொச்சம் ரூபாய் தாழ்த்தப்பட்ட மக்கள், மலை ஜாதியினர் முதலியவர்களின் முன்னேற்றத்திற்காகவும் ஒதுக்கப்பட்டிருக் கும்போது, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் பின்தங்கிய சமூகத்தினருக்காக 117 லட்ச ரூபாய் தான் ஒதுக்கப்படுகிறது என்றால், பின்தங்கிய மக்களின் நிலை உயருமா என்று நான் கேட்க விரும்புகிறேன். இப்போது ஒதுக்கப்படும் தொகை, பின்தங்கிய சமூகத்தினர் அரசியல் துறையிலும், பொருளா தாரத் துறையிலும் முன்னேற கடுகளவாவது பயன்படுமா என்று மிக மிகப் பணிவுடன் கேட்க விரும்புகிறேன். சென்ற வருடம், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில், குறைந்த

9th September 1960] [Sri M. Ethirajalu]

வருமானக்காரர்களுக்கு வீடுகள் கட்டும் திட்டம், தொழிலாளர்களுக்கு வீடுகள் கட்டக் கடன் கொடுக்கும் திட்டம், ஆகிய திட்டங்களின் கீழ் 6 கோடியே 5 லட்சம் ரூபாய் செலவுசெய்து 10,900 வீடுகள் கட்டப்பட்டிருக்கின்றன. ஆனல், மிகப் பின் தங்கிய இனத்தவர்களுக்காக ஏதாவது வீடுகள் கட்டப்பட்டிருக்கின்றனவா? அவர்களுக்காக, உதாரணத்திற்காக எடுத்துச் சொல்வதற்காகவாவது, ஒரு வீடாவது கட்டப்பட்டிருக்கிறதா? இல்லவே இல்லே. இப்படி இருந்தால், அவர்களுடைய பொருளாதார நிலே எப்படி உயரும் என்று நான் கேட்க விரும்புகிறேன். இந்த மூன்ருவது திட்டத்தில் இவர்களுக்காக 12 கோடியே 30 லட்ச ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. அப்படிச் செய்யும்போது கூட கூட்டுறவு ஸ்தாபனங்களில் சேரத் தகுதியில்லாத மிகவும் பின்தங்கிய, தங்களுக்கு வீடுகள் கட்டிக் கொள்ள முடியாத மக்களுக்காக, வீடு ஒன்றுக்கு 1,500 அல்லது 2,000 ரூபாய் வீதம் செலவழித்து வீடுகள் கட்டிக் கொடுக்க ஏதாவது திட்டம் இந்த மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் காட்டப்பட்டிருக்கிறதா? இல்லே. இதை நான் ஏன் குறிப்பிடுகிறேன் என்ருல், மூன்ருவது ஐந்தாண்டுத் திட்ட அமைப்பு பற்றி விவாதித்த கமிட்டியில் மிகவும் பின்தங்கிய இனத்தவர் யாரும் அங்கத்தினராக இல்லே. அந்த இனத்தவர் யாராவது அக்கமிட்டியில் இருந்திருந்தால், அவர்களுடைய நிலேயைப்பற்றி அங்கே தெரிவிக்கப்பட்டிருக்கும், அந்த இனத்தவரின் வாழ்க்கைத் தரத்தையும் பொருளாதார நிலேயையும் உயர்த்த வழிவகைகள் சொல்லப்பட்டிருக்கும். அந்த இனத்தவரின் நிலேயைப் பற்றி அங்கு அறவே விவாதிக்கவில்லே என்று சொல்ல விரும்புகிறேன். 4–50 p.m.

அடுத்தபடியாக, மீனவர்களுக்காக 3 கோடியே 65 லட்ச ரூபாய் ஒதுக்கியிருக்கிருர்கள். படகுகள் போன்றவைகளே வாங்கவும், கயிறுகள் செய்யவும் 375 லட்ச ரூபாய் ஒதுக்கியிருக்கிருர்கள். இதே நேரத்தில், கடற்கரையில் வாழும் மக்கள் மிக மிகக் கேவலமான நிலேயில் வாழ்கிருர்கள். அவர்கள், இன்று கடலில் இருக்கும் செல்வத்தைத் தலேயில் சுமந்துகொண்டு வருகிருர்கள். அவர்களுக்கு நல்ல குடிநீர் வசதியும், பள்ளிக்கூட வசதியும் செய்து தரப்பட்டிருக்கிறதா? (கனம் டெபுடி சேர்மன் மணி அடித்தார்). இன்னும் ஐந்து நிமிஷம்கூட ஆகவில்லே.

DEPUTY CHAIRMAN: 10 நிமிஷம் ஆகிவிட்டது.

Sri M. ETHIRAJALU: அடுத்தபடியாக, எங்கள் ஜில்லா மிகவும் பின்தங்கிய ஜில்லா என்று நான் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் சொல்லிவருகிறேன். தென்ஞற்காடு ஜில்லாவில் பறங்கிப் பேட்டையில் ஒரு கப்பல் கட்டும் தளத்தை அமைக்க வேண்டும் என்று நான் ஏற்கெனவே கோரியிருக்கிறேன். அதுபற்றி அங்குள்ள எஞ்சினியர்களுக்கோ மற்ற அதிகாரிகளுக்கோ ஒன்றும் தெரிவிக்கப்படவில்லே.

அடுத்தபடியாக, மேட்டூரிலிருந்து வரும் அதிகப்படியான ஜலத்தை, ஆத்தூர், வாளாந்தூர் முதலிய பகுதிகள் வழியாக சேத்தியாத்தோப்பு அணேக்கட்டுக்குக் கொண்டுவந்தால்

[Sri M. Ethirajalu] [9th September 1960

தென்ஞற்காடு ஜில்லாவின் வடக்குப் பகுதிகளுக்கும் சிங்கனேரியின் வடக்குப் பகுதிகளுக்கும் நிறைய பாசன வசதி அளிக்க முடியும் என்று எங்கள் ஊரைச் சேர்ந்த ஸ்ரீ. ராமச் சந்திர ரெட்டியார், ஸ்ரீ. கண்ணுச்சாமி படையாச்சி ஆகியவர்கள் யோசனை சொல்லியிருக்கிருர்கள். இத்திட்டத்தை அரசாங்கம் கவனிக்கவில்லை. இதைப் பரிசீலிக்க வேண்டும் என்று அரசாங் கத்தைக் கேட்டுக் கொள்கிறேன். மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் எங்கள் ஜில்லாவுக்குப் போதிய சலுகை காட்டும்படி அரசாங்கத்தைக் கேட்டுக்கொண்டு என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

* Sri A. K. THANGAVEL MUDALIAR: உப தலைவர் அவர்களே, இப்போது உள்ள மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தை நான் ஆதரித்த போதிலும், சில இனங்களில் அதிகப்படி செலவு செய்யவேண்டியதாக இருக்கிறது, சில இனங் களில் குறைக்க வேண்டியதாக இருக்கிறது. அதிகப்படி செலவு செய்யவேண்டிய இனங்கள்—கல்வி, விவசாயம், சுகாதாரம் ரோடு, குடி தண்ணீர், இவைகளில் அதிகப்படுத்த வேண்டும், குறைக்க வேண்டியது, பிரசாரம் என்று போடப்பட்டிருக்கும் ஐட்டம். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 8 லட்சம் ரூபாய், மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 50 லட்சம் ரூபாய் என்று போட்டிருக்கிருர்கள். அவ்வளவு செலவு பண்ண வேண்டாம் என்பது என் அபிப்பிராயம். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் அதிகப் பணம் செலவு செய்திருக் கிருேம் என்று சொல்லப்பட்டது. அது அபிவிருத்தி அல்ல. இப்போது கூலி, மற்றப்படி சாமான் விலை முதலியவை அதிக மாக ஏறிவிட்டன. இவை திட்டங்கள் போடுகிற காலத்தில் இருந்தது போல் இல்லை, அதிகப்படியாகி விட்டன. அதனுல் இதில் அதிகச் செலவு செய்திருக்கிருர்கள். வேறு ஒன்றும் அதனுல் அபிவிருத்தியாக வில்லை. இப்போது பூமிக்கு அடியில் ஆராய்ச்சி பண்ணி தண்ணீர் எடுத்து விவசாயத்தை அபிவிருத்தி பண்ண வேண்டுமென்று திட்டம் கொண்டுவந்திருக்கிருர்கள். அந்த மாதிரி காரியங்களைச் செய்கிறபோது, தண்ணீர் வளம் இருக்கிற இடங்களில் போடப்படுகிற பைப்-ஐ போரிலிருந்து கழற்றி விடக்கூடாது. அதை அப்படியே நிறுத்தி பம்புசெட்டு வைத்து தண்ணீர் எடுத்து விவசாயத்துக்குப் பயன்படுத்த வேண்டும். கூட்டுறவு மூலமாக—விவசாயத் திட்டமிட்டு சில காரியங்கள் சர்க்கார் செய்து வருகிறது—மேற்கொண்டு கூட்டுறவு மூலமாக tractor-கள், நவீனக் கருவிகள் வாங்கி விவசாயிகளுக்குக் கூட்டுறவு மூலம் வாடகைக்கு விட்டு விவசாயத்தை அபிவிருத்தி செய்யலாம்.

(Mr. Chairman in the Chair.)

அடுத்தபடியாக, நல்ல காரியத்தைச் செய்ய வேண்டு மென்று இந்தச் சர்க்காருக்கு ஆசைதான் இருக்கிறது, அதிகாரம் இல்லை. அதற்கு ஒன்று மாத்திரம் உதாரணமாகச் சொல்கிறேன். ரயில்வே லைனை எடுத்துக் கொள்ளுங்கள். அது ரொம்ப முக்கியம். அதை நாம்தான் நம் மக்களுக்குச் செய்ய வேண்டும். அதற்கு நம்மிடம் அதிகாரம் இல்லை. அது

9th September 1960] [Sri A. K. Thangavel Mudaliar]

இந்திய சர்க்காரிடம் இருக்கிறது. ரயில் லேன் போட யாரைப் போய் கேட்க வேண்டும்? அந்த மாதிரி அதிகாரம் இல்லாத அந்தஸ்து; பட்டம், பதவி இவைகள் எல்லாம் அதிகாரம் இருக்குமிடம் போய் அடங்கிவிடுகிறது. அதனாலே தான் D.M.K. திராவிட முன்னேற்றக் கழகம் இந்த நாட்டைப் பிரிக்க வேண்டும் என்று சொல்கிறது. வேறு ஒன்று மில்லை. பிரிக்கும் காரணம், பிரித்து வேலி போடுவதற்காக இல்லை. அதிகாரத்தை வாங்கி இப்போது இருக்கிற சர்க்கார் கொடுத்தால் D.M.K. நாட்டைப் பிரிக்கும்படிக் கேட்காது. இன்னும் எத்தனை வருஷங்களான போதிலும் நாடு ஒற்றுமையாக வாழ வேண்டுமானால் கிரிப்சு திட்டம் தான் இன்னாட்டுக்குப் பொருந்தும். அதைத்தான் நான் சொல்லு கிறேன். அது தான் முக்கியமான என் நோக்கம். இந்தத் திட்டத்திலே எவ்வளவோ எடுத்துச் சொல்ல வேண்டிய பொருள்கள் இருக்கின்றன. பேச காலம் இடம் தரவில்லை. அதனால் இவ்வளவு அனுமதித்த தலைவர் அவர்களுக்கு என் வணக்கத்தைத் தெரிவித்துக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

SRI K. T. KOSALRAM: Mr. Chairman, it is impossible to express my views within five minutes.

MR. CHAIRMAN: I will give the hon. Member 10 minutes.

SRI K. T. KOSALRAM: Thanks.

SRI K. T. KOSALRAM: தலைவரவர்களே, இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் வகுத்ததில் அதிகமான குறை சொல்வதற்கில்லை என்றுதான் சொல்ல முடியும். முக்கியமாக இந்த சபையின் தலைவர் கனம் ஸ்ரீ. வெங்கட்ராமன் அவர்கள் இங்கு இல்லை. நாடு தொழில் மயமாக ஆக்கப்பட்டால்தான் நாட்டில் வேலையில்லாமையைப் போக்க முடியும் என்பதுதான் திட்டத்தின் நோக்கம். அவர்கள் சீக்கிரம் வந்துவிடுவார்கள் என்று நினைக்கிறேன். மராமத்து அமைச்சர் அவர்கள் இருப்பதால் அவர்களுடைய இலாகாவைப்பற்றிச் சில வார்த்தைகள் சொல்லலாம் என்று இருக்கிறேன்.

நாட்டில் விவசாயத்தைப் பெருக்க வேண்டும், அதன் மூலமாகத்தான் நாட்டின் வளத்தைப் பெருக்க முடியும் என்று சொல்லும்போது திட்டத்தில் விவசாயத்துக்கு அதிகமான முக்கியத்துவம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்தத் திட்டத்தை நிறைவேற்றும்போது அந்தத் திட்டம் உண்மையாக மக்களுக்கு பயன்படக் கூடியதாக இருக்கிறதா என்பதைப் பார்க்க வேண்டும். சாதாரணமாக மராமத்து செய்வது என்று சொல்கிறோம். Minor irrigation work, Major irrigation work என்று இரண்டு விதமாக வைத்திருக்கிறோம். பெரிய ஆற்றுப் பாய்மானத்தில்தான் Major irrigation work இருக் கிறது. அதில் ஒரு சில லட்சக் கணக்கான ஏக்கர்கள் தான் இருக் கின்றன. கோடிக்கணக்கான ஏக்கர் நிலம் மானாமாரி குளங் களின் கீழ் இருக்கிறது. மழை பெய்வதிலிருந்து தண்ணீர் கட்டப்படுகிறது. இந்தக் குளங்களை மராமத்து செய்ய யாரோ

[Sri K. T. Kosalram] [9th September 1960

ஒரு சிறிய, Technical qualification அதிகம் இல்லாத ஒருவர் Revenue இலாகாவிலிருந்துவந்து மராமத்து செய்கிருர்கள். அதில் லட்சக்கணக்கான ரூபாய் செலவு செய்கிருர்கள். ஒரு தாலுக்காவுக்கு 2, $2\frac{1}{2}$ லட்ச ரூபாய் செலவு செய்கிருர்கள். ஒரு வருஷம் செலவு செய்து மராமத்து செய்த குளத்தை அடுத்த வருஷம் போய்ப் பார்த்தால், மண்மூடி விடுகிறதே தவிர, தண்ணீர் கட்ட வசதி இல்லாமல் இருக்கிறது. எங்கே குறை இருக்கிறது என்பதை அரசாங்கம் புரிந்துகொள்ளாமல் கோடிக் கணக்கான பணத்தைச் செலவு செய்வது தவறு என்பதை அரசாங்கம் ஒத்துக்கொள்ள வேண்டும். அதற்கு நான் பலமுறை யோசனை கூறியிருக்கிறேன். மராமத்து இலாகாவில் எடுத்துக் கொண்டு, தொழில் நுணுக்க அறிவு உள்ள Engineer- களைப் போட்டு, அதை decentralise பண்ணி Chief Engineer- இடம் தான் வரவேண்டும், அவரிடம்தான் sanction வாங்கிப் போக வேண்டும் என்பதைக் குறைத்து அவ்வப்போது, உடனடியாக வேலைகளைச் செய்ய அந்த இலாகாவைச் சரிப்படுத்திஞல் இந்த மராமத்து வேலைகள் செவ்வனே நடக்கும். அப்படி நடந்தால் ஏராளமான தானியம் இந்த நாட்டில் உற்பத்தியாக முடியும் என்பதை மராமத்து அமைச்சர் அவர்கள் உணர வேண்டும். மராமத்து இலாகாவிலே Minor irrigation -ஐச் சேர்க்க வேண்டும் என்று நான் யோசனை கூறுகிறேன்.

அடுத்தபடியாக மிகவும் வருந்தக் கூடிய விஷயம் பம்பா நதியைப்பற்றியது. இது இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் குறிப்பிடப்பட்டு இருந்தது, முதலிலே வெளியிடப்பட்டபோது. இப்போது செங்கோட்டைத் தாலுக்காவை கூடலூருக்கு விலைக்கு விற்றமாதிரி நடந்து விட்டதோ என்று அஞ்சுகிறேன். சமீபத்தில் நடந்தது பரம்பிக்குளம் சம்பந்தமான பேச்சு வார்த்தை. இதற்கு மராமத்து இலாகா அமைச்சரவர்கள் போகவில்லை என்பதை வருத்தத்தோடு சொல்கிறேன். சென்ற முறை கேட்டேன். பட்டம் தாணுப்பிள்ளை சொன்ஞர்—பம்பாவைப்பற்றி பேசினேம், வெகு சீக்கிரம் முடிவுக்கு வந்துவிடலாம் என்று சொன்ஞர். பரம்பிக்குளத்துக்கு agreement கையெழுத்தானது. அதே சமயத்தில் நமது அமைச்சரவர்கள் பம்பாவைப் பற்றி பேசிஞர்களா, இல்லையா என்று சொல்ல வேண்டுமென்று கேட்டேன். அதற்குப் பதிலில்லை. மத்திய அரசாங்கத்திலிருந்து பதில் அறிக்கை— ஸ்ரீ பட்டம்தாணு பேசிவிட்டேன் என்று சொல்கிருர். ஏன் சொல்கிறேன். Master plan தயார் செய்து மத்திய அரசாங்கத்தினிடம் கொடுத்திருக்கிருர்கள். அதிலுள்ள தண்ணீர் வீணுகப் போகிறது. புனலாறு தண்ணீர்—1 லட்சம் ஏக்கருக்குப் பாயும் தண்ணீர் வீணுகப் போகிறது. கேரள அரசாங்கமும் சென்னை அரசாங்கமும் சேர்ந்து, ‹wer -ஐ அவர்கள் எடுத்துக் கொள்ளலாம், நாம் தண்ணீரை எடுத்துக் கொள்ளலாம் என்று Master plan -ல் கண்டிருக்கிறது. இந்த அரசாங்கப் பிரதிநிதிகள் போஞர்கள். நாம் சந்தோஷப்பட்டோம்; பெருமைப்பட்டோம், பம்பாறு வந்து விடும் என்று. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில்

9th September 1960] [Sri K. T. Kosalram]

செய்யாததை 3-வது ஐந்தாண்டு திட்டத்திலாவது சேர்ப்பார்கள் என்று மூன்று ஜில்லா வாசிகள்—மதுரை, இராமநாதபுரம் திருநெல்வேலி—ஆவலோடு இருந்தார்கள். இன்னும் 5 p.m. சொல்கிறேன் ; முதுகுளத்தூர் தாலுக்காவுக்குக் கூட அதனால் நன்மை வரும் என்று சொல்கிறார்கள். அது மிகமிக பிற்போக்கான தாலூகா. அந்தத் திட்டத்தை இந்த 3-வது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்க வேண்டிய காரியங்களைச் செய்யவில்லை. அதனால் நான் பயப்படுகிற மாதிரி செங்கோட்டையை விற்ற மாதிரி விற்று விட்டார்களோ என்று பயப்படுகிறேன். இதை மராமத்து இலாகா அமைச்சர் இந்திய சர்க்காரை உணரச் செய்ய வேண்டுமென்பது என் நினைப்பு. யாரோ என்னவோ கொண்டுபோக வேண்டுமென்று நினைப்பதை நமக்கு உபயோகப்படும்படிச் செய்ய, எவ்வளவு சண்டை போட வேண்டுமோ அவ்வளவு சண்டைபோட வேண்டும். வேண்டு மானால் " நான் ராஜி நாமாச் செய்வேன் " என்று கூடச் சொல்ல வேண்டுமென்று சொல்கிறேன். இந்தக் காரியத்தை . . .

THE HON. SRI P. KAKKAN: மதிப்புக்குரிய அங்கத்தினர் நிதி மந்திரி அவர்களைப்பற்றித்தான் குறிப்பிட்டார்கள் என்று நினைக்கிறேன். அவர்கள் இந்தச் சபையில் இல்லை. ஏற்கெனவே அரசாங்கம் மேற்கே போகின்ற தண்ணீரைத் தடுத்து நிறுத்தி உதவி செய்ய திட்டத்திலே 5 கோடி ரூபாய் பட்ஜெட்டில் ஒதுக்கி இருக்கிறார்கள் என்பது கனம் அங்கத்தினருக்குத் தெரியும். இன்னும் எந்த முடிவுக்கும் வராதபோது அதை விற்று விட்டோம், இதை அடகு வைத்துவிட்டோம் என்று சொல்லுவது அழகல்ல என்று சொல்லிக்கொள்ள விரும்பு கிறேன்.

SRI K. T. KOSALRAM: மிக்க சந்தோஷம். அதை அடகு வைக்காமல் இருக்க வேண்டும் என்பதுதான் என் ஆசை. இந்த பதிலை இவர் சொல்ல வேண்டும் என்றுதான் விரும்பினேன். இதைச் சொன்னதற்காக இவரைப் பாராட்டுகிறேன். ஒரு மந்திரி இந்தச் சபையில் இல்லாதபோது அவரைப்பற்றிப் பேசக் கூடாது என்று சொல்வது சரியல்ல. ஏனென்றால், சபையில் ஒரு மந்திரி இருந்தாலும் அவர் மற்ற மந்திரிகளுக்கும் கூட்டுப் பொறுப்பு உள்ளவராக இருக்கிறார். கனம் அமைச்சர் ஸ்ரீ. கக்கன் அவர்கள், கனம் அங்கத்தினர்கள் மற்ற அமைச்சர் களைப்பற்றிப் பேசுவதைக் கேட்டுக்கொண்டிருக்க முடியும். இதே போலத்தான், அந்தத் திட்டம்பற்றிப் பேச கனம் நிதி மந்திரி இந்த மந்திரி சபையின், இந்த சர்க்காரின் பிரதிநிதி யாகவே அங்கு சென்றார். எனவே மற்ற மந்திரிகளுக்கும் இதில் பங்கு உண்டு என்று சொல்லிக்கொள்ளுகிறேன். செங்கோட்டை என் ஜில்லாவிலிருந்து அடகு வைக்கப்பட்டது எனக்குத் தெரியும். இதை நான் பல முறை குறிப்பிட்டிருக் கிறேன். அன்பு மிக்க ஸ்ரீ. பந்த் அவர்கள் இந்த விஷயத்தை மீண்டும் பரிசீலனை செய்கிறேன் என்று சொல்லியிருப்பது எல்லோருக்கும் தெரியும்.

[Sri K. T. Kosalram] [9th September 1960

அடுத்தபடியாக, கீரியாறுத் திட்டம் பத்து வருஷங்களுக்கு முன்பு பரிசீலனை செய்யப்பட்டது. கீரியாறையாவது திட்டத்தில் "சேர்த்திருக்கிறேம்" என்று சர்க்கார் சொல்லியிருக்கலாம். அவ்வாறு அதைத் திட்டத்தில் சேர்த்திருந்தால் நன்றாக இருந்திருக்கும். அதைச் செய்யவில்லை. அதைத் திட்டத்தில் சேர்க்க வேண்டும் என்று சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன்.

வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்க வேண்டும் என்பது தான் திட்டத்தின் நோக்கம். நமது மாநிலத்தில் ஐந்து, ஆறு ஹெவி இண்டஸ்ட்ரீஸை ஏற்படுத்தினல், அதனல் ஏராளமான பேர்களுக்கு வேலை கொடுத்துவிட முடியாது. இதை அரசாங்கம் ஒத்துக்கொள்ள வேண்டும். நான் இவ்வாறு சொல்வதால், இங்கே ஹெவி இண்டஸ்ட்ரீஸ் வேண்டாம் என்று நான் சொல்லவில்லை. இந்த ராஜ்யத்தில் லைட் எஞ்ஜினியரிங் இண்டஸ்ட்ரீஸை ஏற்படுத்த வேண்டும். சிறுசிறு பௌண்ட்ரீயை ஏற்படுத்த வேண்டும். 5 லட்சம் 10 லட்சம், 20 லட்சம், 25 லட்சம் ரூபாய் முதலீடு செய்து ராஜ்யம் முழுவதிலும் இம்மாதிரியான கைத்தொழில்கள் அமைத்தால்தான் வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்க முடியும். அதற்கு இந்த அரசாங்கம் வகைசெய்யவில்லை. சர்க்கார் பல இண்டஸ்ட்ரீஸுக்கு வகை செய்திருக்கிறார்கள். அதை நாம் பாராட்டாமல் இருக்க முடியாது. லைட் எஞ்ஜினியரிங் இண்டஸ்ட்ரீஸ் ஏற்பட வகை செய்ய வேண்டும். "இதற்காக வருஷத்திற்கு 25 லட்ச ரூபாய் கொடுக்கிறேனே" என்று கனம் மந்திரி ஸ்ரீ. வெங்கடராமன் சொல்லக்கூடும். அந்தப் பணம் ஒரு கிராமத்திலுள்ள சாதாரணத் தொழிலுக்குக் கூடப் போதாது. எனவே இதற்காக ராஜ்ய தொழில் இலாகாவின் மூலம் வருடத்திற்கு ஒரு கோடி ரூபாய் வீதம் ஐந்து வருடங்களுக்கு ஐந்து கோடி ரூபாய் கொடுக்க வேண்டும். அத்துடன், ராஜ்ய தொழில் முதலீட்டுக் கார்ப்பொரேஷன் மூலம் குறைந்தது 50 கோடி ரூபாய் தர வேண்டும். அவ்வாறு செய்தால் ராஜ்யம் முழுவதிலும் ஏராளமான தொழிற்சாலைகள் ஏற்படுத்தலாம்.

அடுத்தபடியாக, ஜியலாஜிகல் ஸர்வே செய்ய வேண்டிய அவசியத்தைக் குறிப்பிட விரும்புகிறேன். இந்த ராஜ்யத்தில் பூமிக்குள் ஏராளமான புதைபொருள்கள் இருக்கின்றன. அலுமினியம், இரும்பு முதலியவை இங்கே பூமிக்குள் இருக்கின்றன.

MR. CHAIRMAN: The hon. Member's time is up.

SRI K. T. KOSALRAM: I want two more minutes, Sir. சேலத்து அலுமினியம் மாதிரி தமிழ் நாட்டில் எவ்வளவோ கனிப்பொருள்கள் இருக்கின்றன. பூமிக்குள் இருப்பதைப் பரிசீலித்தால் அவை கட்டாயம் கிடைக்கும். பாக்கியவசமாக இதற்கென ஒரு இலாகா இருக்கிறது. அந்த இலாகாவின் மூலம் இந்த ராஜ்யத்தில் தாலூகா தாலூகாவாக, கிராமம் கிராமமாகப் பரிசீலனை செய்தால் இந்த நாட்டில் தொழில் வளத்தை அதிகரிக்க முடியும் என்று யோசனை சொல்ல விரும்புகிறேன். இதைச் செய்ய வேண்டும் என்று சர்க்காரைக் கேட்டுக் கொள்கிறேன்.

9th September 1960] [Sri K. T. Kosalram]

அடுத்தபடியாக, டிரான்ஸ்போர்ட் வசதிகளை.....................

MR. CHAIRMAN: The hon. Member Sri A. Subramanyam will now speak.

* SRI A. SUBRAMANYAM: கனம் அவைத் தலைவர் அவர்களே, சென்னை மாநில மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தை வரவேற்று சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். நமது மாநிலத்திற்கென கணிசமான அளவுக்குப் பணம் ஒதுக்கப் பட்டாலும் கிடைத்த பணத்தைக் கொண்டு நல்ல முறையில் காரியங்கள் செய்வதற்கான வகையில் திட்டங்கள் வகுக்க வேண்டும். ஏதோ வேடிக்கையாகப் பேச வேண்டும் என்ற எண்ணத்துடன் இத்திட்டத்தின் பேரில் பேச நான் முன்வர வில்லை.

சேலம் ஜில்லா இந்த மாநிலத்தில் ஒரு பெரிய ஜில்லா ; இதர 13 ஜில்லாக்களை விட அதிகமான ஜனத்தொகை கொண்டதாகும். அது சற்றேறக் குறைய 35 லட்சம் ஜனத்தொகை கொண்டது. இதை யாரும் மறுக்கவோ மறைக்கவோ முடியாது. இந்த ஜில்லாவானது மிகவும் பிற்பட்ட நிலையில் இருக்கிறது என்பது யாவரும் அறிந்த விஷயம். அந்த ஜில்லாவில் தப்பித் தவறி ஒரு பெரிய அணை கட்டப்பட்டிருக்கிறது. அதற்கு மேட்டூர் அணை என்று பெயர். ஆனல் அந்த ஜில்லாவில் பெரும் பாலானவர்களுக்கு அந்த அணையினல் ஒரு பிரயோஜனமும் இல்லை. தஞ்சாவூர் ஜில்லாவில் பெரும்பாலானவர்கள் அதனல் பயனடைந்து வருகிறர்கள். அதைக் கண்டு நான் மகிழ்ச்சியடைகிறேன். அவர்களாவது அதனல் பயனடைவதைக் கண்டு நான் மகிழ்ச்சியடைகிறேன். சேலம் ஜில்லாவில் பெரும்பாலான நிலங்கள் மானம்பார்த்த பூமி. மழை பெய்தால் அங்கு விளைச்சல் உண்டு, இல்லாவிட்டால் ஒன்றுமில்லை பராபரமே என்று கூற வேண்டும். இந்த நிலையில் இருக்கும் சேலம் ஜில்லாவில் மக்களின் கல்வி அறிவைப் பார்ப்போம். அங்கே கல்விக்காகச் செய்யப்பட்டுள்ள ஏற்பாடுகளைப் பார்ப்போம். ஆரம்பப் பாடசாலைகளும், உயர்தரப் பாடசாலைகளும் மற்ற ஜில்லாக்களில் ஏற்படுத்தப்பட்டு வருவதைவிட மிகக் குறைவாகவே அந்த ஜில்லாவில் ஏற்படுத்தப்பட்டு வருகின்றன. அங்கே நல்ல பெரிய கல்லூரிகள் இருக்கின்றனவா என்று பார்ப்போம். அங்கே ஒரு கல்லூரிதான் இருக்கிறது. வட சேலம் தருமபுரியில் உடனடியாக ஒரு கல்லூரி ஏற்படுத்த வேண்டும். நான் ஏற்கெனவே குறிப்பிட்டபடி அது அதிக ஜனத்தொகை கொண்ட ஜில்லா. எனவே இந்தத் திட்டத்தில், இம்மாதிரியான ஜில்லாக்களைப் பொறுக்கியெடுத்து, அவைகளுக்கு அவசியமானவைகளையெல்லாம் உடனடியாகச் செய்ய அரசாங்கம் முன்வர வேண்டும். அப்படிச் செய்தால்தான் திட்டத்தினல் நல்ல பலன்கள் ஏற்படும். அவ்வாறு செய்தால் தான் "இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் அதைச் செய்தோம். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இதைச் செய்தோம். அதனல் பிற்பட்ட நிலையில் இருந்த சேலம் ஜில்லா இன்று இந்த நிலைக்கு வந்திருக்கிறது. இன்னும் சில ஐந்தாண்டுத் திட்டங்களில் அது

[Sri A. Subramanyam] [9th September 1960

இன்னும் மேன்மை அடையும்" என்று சர்க்கார் சொல்லிக் கொள்ள முடியும். மக்களும் மிகவும் மகிழ்ச்சியடைவார்கள். எனவே இந்த விஷயத்தில் முக்கிய அக்கறை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று நான் கனம் அமைச்சர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

5-10 p.m. இப்போது எனக்கு பேசுவதற்கு அதிக நேரம் அளிக்கப்பட வில்லை. அது கனம் தலைவர் அவர்களுடைய குற்றம் இல்லை. அதிகமான அங்கத்தினர்கள் பேச விரும்புவதால் எனக்கு அவர் குறைவான நேரத்தை அளித்திருக்கிறார். ஆகவே, சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல் என்ற முறையில் சில வார்த்தைகள் சொல்லி என் கருத்துக்களைத் தெரிவிக்க முற்படுகிறேன்.

சேலம் ஜில்லாவில் விவசாயிகள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள் என்றால் அது மிகையாகாது. அவர்களுக்கு எந்த விதமான அனுகூலமும் ஏற்படவில்லை. எங்கள் ஜில்லாவில் மிகவும் பிற் பட்ட தாலூகா ஒன்று இருக்கிறது என்றால், அது தருமபுரி தாலூக்காவாகும். அங்கே நிறையக் காடுகளும், மேடுகளும் இருக்கின்றன. அங்கே ஏதோ ஐந்து ஆறு வருடங்களுக்கு ஒரு முறை தப்பித் தவறி மழை பெய்து விடக்கூடும், பெய்யாமலும் இருந்துவிடக் கூடும். இதன் காரணமாக அங்குள்ளவர்கள் சதா ராகி அல்லது சோளச் சோறு தான் சாப்பிடக்கூடியவர் களாக இருக்கிறார்கள். அந்த தானியங்கள் தான் அங்கு அதிக மாக விளைகின்றன. இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேலம் ஜில்லாவில் தொப்பையாறு, சின்னாறு என்ற இரண்டு திட்டங்கள் இருக்கின்றன. அவைகளை சீக்கிரம் நிறைவேற்ற வேண்டும் என்று சர்க்காரைக் கேட்டுக் கொள்கிறேன். சின்னாறு திட்டத்தைப் பொறுத்தவரையில், மக்கள் ஒரு இடத் தில் அணை கட்ட வேண்டும் என்று சொல்லுகிறார்கள். அரசாங் கத்தார் மற்றொரு இடத்தைக் குறிப்பிட்டு அங்கு தான் அணை கட்ட வேண்டும் என்று சொல்லுகிறார்கள். அரசாங்கம் குறிப் பிடும் இடத்தில் ஏற்கெனவே 800 ஏக்கருக்கு ஜலம் பாயக்கூடிய சம்பத்குமார நதி இருக்கிறது. அங்கே இந்த அணையைக் கட்டினால் அங்கு மேலும் 800 ஏக்கருக்கு ஜலம் பாயக் கூடிய நிலை தான் ஏற்படும். ஆக, அங்கே மொத்தம் 1,600 ஏக்கருக்கு தண்ணீர் பாயக் கூடிய நிலை ஏற்படும். தற்போது ஏற்படுத்தப் பட்டிருக்கும் திட்டப்படி 44,800 ரூபாய் செலவு செய்து அணையைக் கட்டினால் மிகவும் கஷ்டப்படும் ஏழை விவசாயி களுக்கு எப்படி ஜலம் கிடைக்கும்? இதனால் தாலூகா முழு வதிலுமுள்ள எல்லா ஏழை விவசாயிகளுக்கும் எந்தவிதமான நன்மையும் ஏற்படாது.

ஆனால் மக்களுடைய விருப்பத்தின்படி, தாலூகாவாசிகளின் விருப்பத்தின்படி, இன்னும் கொஞ்சம் கீழே வந்து அந்த அணை யைக் கட்டினால், மேற்கொண்டும் ரூபாய் 40 லட்சம் அதிகப் படுத்தி மொத்தம் 80 லட்ச ரூபாய் அளவில் செலவழித்தால் ஏறக்குறைய 30 ஆயிரம் ஏக்கர் பயிராகக் கூடிய ஒரு நல்ல வாய்ப்பு அங்கே கிடைக்கும். இங்கு ஐந்து ஆறுகள் பாயக் கூடிய வாய்ப்பும் இருக்கிறது. இதை ஏதோ வாய் அளவில்

9th September 1960] [Sri A. Subramanyam]

சொல்லவில்லை. இதுதான் நியாயமாக ஒப்புக்கொள்ளக் கூடியதாகும். அணையைக் கீழே கட்ட வேண்டுமென்று சொல் கிறார்கள். மேலே கட்டிவிட்டால் தண்ணீர் வேகமும் குறை கிறது. ஹோசூர் தாலூகாவில் 800 ஏக்கருக்குத்தான் பயன் படும். ஆகையினால் இந்த அணையை மல்லேஸ்வரன் கோயில் வெள்ளைக்கல் மலைச்சாரல் என்ற இடத்தில் கட்டினால், 40 ஏரி களுக்கு பாயும். என்னிடம் விவரம் இருக்கிறது. 30,000 ஏக்கருக்கு ஜலம் பாயும் திட்டம் முழுவதும் என்னிடம் இருக் கிறது. எதையாவது பேச வேண்டுமென்று கருதி இதை நான் பேசவில்லை. ஆகையினால் இந்தத் திட்டத்தை அரசாங்கம் உடனடியாகக் கவனித்துச் செய்ய வேண்டும். செய்யும் காரியத் தைத் தெரிந்து செய்யவேண்டும் என்ற நோக்கத்தோடு விவசாயிகளுக்காக அந்தத் திட்டத்தைச் செய்தால், சேலம் ஜில்லாவில் மேட்டூர் அணை பிரயோசனம் இல்லாமல் இருக்கும் நிலையில் இந்த அணையைக் கட்டினால், குறிப்பாக தர்மபுரி தாலூகாவுக்கு ஷேமகரமான நிலை ஏற்படும் என்பதை யும் இந்த சந்தர்ப்பத்தில் தெரிவித்துக் கொள்ள ஆசைப் படுகிறேன்.

அடுத்தபடியாக, பிற்பட்டவர்களைப் பற்றி சில வார்த்தைகள் சொல்வது என் கடமை. 1937-ம் வருஷத்திலிருந்து 1952-ம் வருடம் வரையில் நான் கீழ் சட்டசபையில் இருந்திருக்கிறேன். 1952-லிருந்து இதுவரையில் மேல் சட்டசபையில் இருக்கிறேன். எந்தச் சந்தர்ப்பம் கிடைத்தாலும் பிற்பட்ட இனத்தவர்களைப் பற்றி பேசாமல் இருப்பது இல்லை. பிற்பட்ட இனத்தவர்களின் உத்தியோக வசதிகளை அதிகப்படுத்த வேண்டுமென்று அடிக்கடி கேட்டுக்கொள்வது உண்டு. அதற்கிணங்க நாமும் கொஞ்சம் செய்தோம் என்று இருக்கட்டும் என்ற முறையில் அரசாங்கம் சொற்பமான சலுகையைத்தான் செய்கிறதே தவிர, "முதல் 5 வருஷத்தில் இதைச் செய்தோம், அடுத்த 5 வருஷத்தில் இதைச் செய்தோம், 15 வருஷங்களுக்குள் இதைச் செய்தோம், இப்பொழுது சரிசமத்துவம் ஏற்பட்டுவிட்டது, இனிமேல் பிற்பட்டவர்கள் முற்பட்டவர்கள் என்ற வித்தியாசமே இருந்து வரக் காரணமில்லை. எல்லோருமொன்றென்னும் காலம் வந்தது. கெட்ட நயவஞ்சகக்காரர்களுக்கெல்லாம் நாசம் வந்தது", என்று சொல்லவில்லை. இது பாரத தேசம். நாம் எல்லாம் ஒன்று என்று சொல்லும் நாளை நாம் அதிக விரைவிலே ஏற்படுத்த வேண்டுமென்றுதான் இதை வற்புறுத்த விரும்புகிறேன். 110 லட்சம் இந்த பிற்பட்ட இனத்துக்கு ஒதுக்கியிருக்கிறார்கள். இது பெருங்காய டப்பிதான். கடலில் கரைத்த பெருங்காயம் மாதிரிதான். பிரயோசனம் அதிகமில்லை. இந்த மாகாணத்தில் மொத்த ஜனத்தொகை 3 கோடி. இதில் 2 கோடி மக்கள் பிற்பட்ட வர்களாக இருக்கிறார்கள். இது யாவரும் அறிந்த விஷயம். தற்போது அரசாங்கம் கொஞ்சம் கல்விச் சலுகை கொடுத்த பிறகு இப்போதுதான் படித்து முன்னுக்கு வருகிறார்கள் Double, treble degree வாங்குகிறார்கள். ஆனால் unemployment வேலையில்லாத் திண்டாட்டம் மிக மோசமாக இருக்கிறது. படித்தவர்களுக்குத் தகுந்த சலுகையையாவது சரியானபடி

கொடுக்க வேண்டும். பிற்பட்ட இனத்தவர்களுக்கு அரசாங்கத்தில் தற்போது உத்தியோகம் வழங்கப்பட்டு வரும் முறையானது சரியில்லே. அதை மாற்றி திருத்தி ஜனத்தொகை விகிதாசாரத்திற்குத் தகுந்த வகையில் அமைக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன். பிற்பட்ட இனத்தவர்களுக்கு கல்வியிலும் கோடிக்கணக்கான பணத்தை ஒதுக்க வேண்டும். குறைந்த ஜனத்தொகை உள்ளவர்களுக்கு, ஹரிஜன், மலே ஜாதியினர் முதலியவர்களுக்கு, 12, 13 கோடி ஒதுக்கிவிட்டு, 2 கோடி ஜனத்தொகை கொண்ட பிற்பட்ட இன மக்களுக்கு ஏதோ 1 கோடி 10 லட்சம் என்று ஒதுக்கி வைத்தால் அது பொறுத்தமாக இருக்காது. ஆகையினுல் இதை அரசாங்கம் உடனடியாகக் கவனித்து பிற்பட்ட இனத்தவர்கள் மீது கருணே கூர்ந்து ஆவன செய்ய வேண்டுமென்று வேண்டுகிறேன். மேலும் பணம் ஒதுக்க வேண்டுமென்று மறுபடியும் தெரிவித்துக் கொண்டு, மராமத்து இலாகா மந்திரி அவர்களே இந்த இலாகாவிற்கு மந்திரியாக இருப்பதால் இதைக் கவனிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டு, தலேவரவர்கள் இந்த மாதிரி சந்தர்ப்பத்தில் பேச சந்தர்ப்பம் அளித்ததற்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொண்டு என் வார்த்தையை முடித்துக் கொள்கிறேன்.

Sri M. SESHACHARIAR: தலேவரவர்களே இந்த மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தைப் பற்றிப் பேசுகிற போது ஒன்றிரண்டு வார்த்தைகள் சொல்லி நிறுத்திக் கொள்ளலாம் என்றிருக்கிறேன். முக்கியமாக பெரிய Heavy Industries என்று சொல்லுகிருர்களே, அந்தப் பெருந்தொழில்களில் ஸ்ரீமான் வெங்கட்ராமன் செய்த அரும் பெரும் சேவையைப் பாராட்டாமல் இருக்க முடியாது. அதிலே முக்கியமாக அவர் எழுதிக் கொடுத்திருக்கிற குறிப்பைப் படித்துப் பார்த்தால் ரொம்ப கஷ்டப்பட்டுத் தயார் செய்த மாதிரி தெரிகிறது. ஒன்று நன்ருக விளங்குகிறது. நம் மந்திரிகளோ நம் பார்டியைச் சேர்ந்தவர்களோ மத்திய அரசாங்கத்துக்குப் பயந்து கொண்டு காரியம் செய்கிருர்கள் என்று சொல்வது தவறு. முற்றிலும் போராடிச் சலுகைகள் வாங்குகிருர்கள் என்று தெரிகிறது. அது நிற்க. அவர் சொன்னுர் நெய்வேலி பழுப்பு நிலக்கரியைக் கொண்டு புதிதாக plant ஆரம்பிக்கிருேம். ஏற்பாடு செய்கிருேம், என்று. மத்திய அரசாங்கம் ஆரம்பிக்கும் முன்பு நாங்கள் ஏற்பாடு செய்கிருேம் என்று சொன்னுர்கள். அது வரவேற்கத் தக்க விஷயம். Coke இருக்கிறதே, அது பீஹார் முதலிய இடங்களில் இருந்து வந்தால் செலவு அதிகமாகிறது. கடல் மூலம் வந்தாலும் சரி ரயில் மூலம் வந்தாலும் சரி, செலவாகிறது. அதைச் சுத்தப்படுத்தும் plant -ஐ இங்கே வைக்கலா[illegible]று சொல்கிருர். நாம் கேள்விப்படுகிருேம் C வ[illegible]தால் தொழிற்சாலேயை நிறுத்துகிருர்கள் என்று தெரிகிறது [illegible]தைச் சீக்கிரம் ஆரம்பிக்க வேண்டியது நியாயம். விவசாயத்தையும் விவசாயிகளேயும் பற்றி ஒன்றிரண்டு வார்த்தைகள் சொல்லலாம் என்று நினேக்கிறேன். உற்பத்தி அதிகமாகுமா என்று யோசித்துப் பார்த்தால், அணே, ஏரிகள் எல்லாம் அநேகமாகப் பார்த்தாய்விட்டது. சின்ன ஏரிகளேச்

9th September 1960] [Sri M. Seshachariar]

சுத்தமாக்கி விட்டோம். Fertilize இன்னும் 2 வருஷத்துக்குக் கிடைக்காது. இரண்டு வருஷத்துக்குப் பிறகு தான் நெய்வேலி வரும். உற்பத்தியை அதிகமாக பெருக்க முடியும் என்பது சாத்தியமில்லை என்றே சொல்லலாம். விவசாயத்தில் உற்பத்தியை அதிகமாக்க முடியும் என்று சொல்ல முடியாது. எவ்வளவு நிலப்பரப்பு பயிரிட முடியுமோ அதைப் பயிரிட்டாகி விட்டது. நல்ல முறையில் பயிரிடுகிறார்கள். எதிலிருந்து தெரிகிறது என்றால், Fertilizer க்கு ஏராளமான demand இருப்பதிலிருந்து தெரிகிறது. ரொம்ப அதிகமான ஜனங்கள் அதில் கவனம் செலுத்துகிறார்கள். இன்னும் அதிகமாக விஸ்தரித்து அதிகமாக உற்பத்தி பண்ண வேண்டுமென்றால் இதற்கு மேல் சாத்தியம் இருக்கும் என்று தோன்றவில்லை. புதிதாக அணைகள் கட்டுகிறார்கள். கிணறு எடுக்க மான்யம் கொடுக்கிறார்கள். அதை அதிகமாகக் கொடுத்தால், அநேகம் பேருக்குக் கொடுத்தால், அப்போதாவது கொஞ்சம் விருத்தி யடையும். அந்த நிலையை யோசிக்கும்போது விவசாயி களுடைய நிலையைக் கவனித்தால், சிறு விவசாயிகளுக்குச் சௌகரியம் உண்டா என்பதை யோசித்துப் பார்க்க வேண்டும். 20, 30 ஏக்கர்காரர்களுக்கு சௌகரியம். சிறு விவசாயிகளுக்கு சௌகரியம் இல்லை. குடும்பத்துக்குத்தான் காணும்.sustenance ஜிவனோபாயத்துக்கு மாத்திரம் தான் உபயோகப்படும்; அதற்கு மேல் உபயோகப்படும் என்று தோன்றவில்லை. 4, 5, 10 ஏக்கருக்குள்ளே வைத்து இருக்கிறவர்களுக்கு இவர்கள் சொல்கிற மாதிரி self propelling economy எப்பொழுது வரும் என்று தெரியவில்லை. முக்கியமாக சிறு விவசாயிகளுக்கு 4, 5 பேர் குடும்பத்தில் இருந்தால், 5, 6 ஏகரில் வேலை செய்தால்கூட கூலிக்குக்கூடக் கட்டாது. சேமித்து வைக்க சாத்தியமில்லை. சிறு தொழில் அவர்களுக்குக் கட்டாயம் வேண்டும். மந்திரி அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். Taluk Headquarters, District Headquarters -ல் ஆரம்பிக்கலாம் என்று சொல்லிவருகிறார்கள். இன்றைக்கு ஆரம்பிக்க வேண்டும் என்று நினைத்தால் 2 வருஷமாகும். கூட்டுறவில் ஆரம்பித்தாலும் நாளாகும். தனிநபர் ஆரம்பித்தால் கொஞ்சம் சீக்கிரம் முடியும். கூட்டுறவில் ஆரம்பித்தால் 1½ 2 வருஷமாகும். அதற்குப் பிறகுதான் அது எடுக்கப்படும். காரணம் என்ன? நாம் ப்ளாக்குகளில் போட்டிருக்கும் கோவாபரேடிவ் எக்ஸ்டென்ஷன் ஆபீசர்களிடம் அதற்கு வேண்டிய ஊக்கமும் திறமையும் குறைவாக இருக்கின்றன. கிராமங்களில் புதிதாகத் தொழில்களை ஆரம்பிக்க வேண்டும். தாலூகா ஹெட்குவார்டர்ஸில் பல தொழில்களை ஆரம்பிக்க வேண்டும். இதையெல்லாம் செய்தால் ஒவ்வொரு குடும்பத்திலும் இரண்டு, மூன்று பேர்களாவது வேலை செய்வார்கள்; அதன் விளைவாக ஒவ்வொரு குடும்பத்திலும் சேமிப்பு ஏற்படும். அம்மக்கள் தங்களுக்கு வேண்டிய சாமான்களை வாங்கிக்கொள்ள முடியும். கன்ஸ்யூமர் குட்ஸை எவ்வளவு உற்பத்தி பண்ணினாலும் பிரயோசனமில்லை. அவைகளை வாங்கக்கூடியவர்கள் அவர்கள் தான். விவசாயத்தை அபிவிருத்தி செய்தால் மட்டும்

5-20 p.m.

[Sri M. Seshachariar] [9th September 1960

இவர்களுடைய நிலே உயர்ந்து விடாது. எனவே ஒவ்வொரு தாலூகாவிலும் ஏதாவதொரு தொழிலே ஆரம்பிக்க வேண்டும். மக்கள் அத்தொழில்களில் கூட்டுறவு முறையிலோ தனிப்பட்ட முறையிலோ ஈடுபட்டு வேலேசெய்தால்தான் அவர்களுடைய வாழ்க்கைத்தரம் உயர முடியும். விவசாயத்திலிருந்து அதிக வருமானம் வராது. இனிமேல் விவசாயத்தையும் அதிகம் அபிவிருத்தி பண்ண முடியாது என்று தோன்றுகிறது.

அடுத்தபடியாக, தொழில் துறை சம்பந்தமாக ஒரு விஷயம் சொல்ல விரும்புகிறேன். சகஜமாக, தொழில் முறை வேலே தெரிந்தவர்கள் குறைவாக இருப்பதாகச் சொல்லப்படுகிறது. சாதாரண வேலே தெரிந்தவர்கள் கிடைப்பது கூட கஷ்டமாக இருக்கிறது என்று சொல்லப்படுகிறது. இந்தக் குறையை யெல்லாம் போக்க வேண்டுமானுல், சிறு தொழில்கள் கற்றுக் கொடுக்கும் பள்ளிகளே ஏராளமாக அமைக்க வேண்டும். அவைகளே சில இடங்களில் அமைத்திருக்கிறுர்கள். அவைகளில் அதிகமான பேர்களுக்கு இடம் இல்லே. அந்தப் பள்ளிக் கூடங்கள் நிறைய அமைத்து, அவைகளின் மூலம் சிறு தொழில்கள் தெரிந்தவர்களின் எண்ணிக்கையை நாட்டில் அதிகரித்தால், அவர்கள் தாங்களாகவே சில தொழில்களே ஆரம்பித்து நடத்த முடியும். ஏனென்றுல் இப்போது எல்லா இடங்களிலும் மின்சாரம் இருக்கிறது. இந்தப் பள்ளிக் கூடங்களே ஆங்காங்கு கிராமங்களில் ஏற்படுத்த வேண்டும்.

அடுத்தபடியாக, கோவாபரேஷன் துறையைப் பற்றி ஒரே ஒரு விஷயம் சொல்ல விரும்புகிறேன். இந்தத் துறையில் பிற்போக்கான பகுதிகளேப் பொறுக்கியெடுத்து, அவைகளில் ஸூபர்வைஸிங் க்ரெடிட் யூனியன்களே அமைத்து—மல்டி—பர்பஸ் ஸொஸைடிகள்—சேவா சங்கங்களே வைத்து கடன் கொடுக் கிறுர்கள். அத்துடன் அவர்கள் எரு முதலியவைகள் கொடுக்க ஏற்பாடுகள் செய்து கொண்டிருக்கிறுர்கள். அவர்களுக்கு போதுமான "ஷேர் காபிடல்" இல்லே. கோவாபரேடிவ் பாங்குகளாவது, ஸெண்ட்ரல் பாங்குகளாவது கடன் கொடுக்க வேண்டும். இல்லாவிட்டால் சாதாரணமாகக் கொடுக்கும் குறுகிய காலக் கடன்களேயோ, மத்திய காலக் கடன்களேயோ, நிறையக் கொடுக்க வேண்டும். விவசாயிகளுக்குத் தேவையான எல்லாச் சாமான்களும் அவர்களுக்குக் கிடைக்க வேண்டு மானுல் அவ்வாறு செய்ய வேண்டும்.

மேலும், வட்டி ரேட்டை குறைக்க வேண்டும் என்று கொஞ்ச காலத்திற்கு முன்பு கனம் அமைச்சர் ஒரு இடத்தில் சொல்லியிருக்கிறுர். இவ்வாறு ரொம்ப காலமாகச் சொல்லிக் கொண்டிருக்கிறுர்கள். அரசாங்கத்தார் $4\frac{1}{2}$ சதவிகிதம் வட்டிக்கு குறுகிய காலக் கடன் கொடுக்கிறுர்கள். அந்த வட்டி விகிதத்தை இவர்கள் குறைத்தால், மற்றவர்கள் தகுந்த வட்டி விகிதத்திற்குக் கடன் கொடுக்கலாம். அந்த மாதிரிக் கடன் கொடுத்தால் கிளார்க்குகள் வைத்துக்கொள்ள முடியும். வேலே சரிவர நடக்கும். இவர்கள் உத்தியோகப் பற்றில்லாதவர்களேயே வைத்துக் கொண்டு எல்லாம் செய்வதில்லே. ஆகையால் இவர்கள் குமாஸ்தாக்கள் வைத்துக் கொள்ள வேண்டியிருக்

9th September 1960] [Sri M. Seshachariar]

கிறது. சர்க்கார் தாங்கள் கூறுவதை சீக்கிரம் நிறைவேற்றினுல் சங்கங்கள் சீக்கிரம் முன்னேற முடியும் என்று நினைக்கிறேன்.

அடுத்தபடியாக, பிளாக் லெவலிலோ வேறு அளவிலோ காரியங்கள் ஆரம்பித்தால், மேலதிகாரிகள் பிறர் சொல்வதைக் கேட்டு எல்லாவற்றையும் ஆலோசித்துக் காரியங்கள் செய்கிறூர்கள். கீழே போகப்போக அதிகாரிகள் அப்படிச் செய்வதில்லே. பிளாக் லெவலில் ஏதேனும் ஒரு இண்டஸ்ட்ரி அமைக்க வேண்டும் என்று உத்தரவு போட்டால், அதை ஆரம்பிக்க ஒரு வருஷம் அல்லது ஒன்றரை வருஷ காலம் ஆகின்றது. 5-30 p.m.

மார்க்கெட்டிங் ஸொஸைடீஸை எடுத்துக் கொண்டால், 800 கோடவ்ன்கள் கட்ட வேண்டும் என்று சொல்லியிருக்கிறூர்கள். விவசாயிகள் கட்டாயம் நெல்லே நேரடியாக மார்க்கெட்டிங் ஸொஸைடீஸுக்குக் கொடுப்பார்கள் என்ற நிச்சயம் இல்லே. இதை யோசித்துத்தான் " இண்டக்ரேடட் மார்க்கெட்டிங் " என்ற முறையை ஆரம்பித்தார்கள். இந்த முறையில், கொடுக்கப் படும் கடனுக்கு, அறுவடையாகும் நெல் ஸெக்யூரிடியாக இருக்கும். விவசாயிகள் நெல்லே மார்க்கெட்டிங் ஸொஸைடீஸ் மூலம் விற்று கடனேப் பைசல் பண்ண வேண்டும். நெல் மார்க்கெட்டிங் ஸொஸைடிஸுக்கு வராததால், ரெகுலேடட் மார்க்கெட்ஸ் வைக்க வேண்டும் என்று " ஆக்ட் " " பாஸ் " ஆகி விட்டது; ஆனுல் ரூல்ஸ் ப்ரேம் பண்ணவில்லே. மேலும் மார்க்கெட்டிங் ஸொஸைடீஸ்களுக்கு கட்டாயம் லாரிகள் வேண்டும். இவைகளேயெல்லாம் செய்யாமல் மார்கெட்டிங் ஸொஸைடீஸ் வைப்பதில் பிரயோஜனமில்லே என்று சொல்லிக் கொண்டு என் வார்த்தையை முடித்துக் கொள்கிறேன்.

* SRI M. V. SUDARSANAM NAIDU: தலேவரவர்களே! இப்போது மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தைப் பற்றி மிக விரிவான பல விஷயங்களே அரசாங்கம் செய்ய முன்வந்திருக் கிறது. முக்கியமாக இப்போது சொன்ன விஷயங் களிலிருந்து சென்ற இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்கள் எல்லாம் நடை முறையில் மிக உன்னதமாக நடந்தது என்பது எல்லோருக்கும் தெரியும். அது போதுமானபடி வியாபகப் படவில்லே. சில குற்றங் குறைகளேயும் கேட்டுக் கொண்டு வருகிறேம். பெரிய நிர்வாகத்தில் இந்த மாதிரி குற்றங்கள் நிகழ்வது சகஜம். பல விஷயங்களிலே அனுபவக் குறைகள் இருக்கலாம். அந்த மாதிரி விஷயங்களில் குறைபாடுகள் நிகழ்வது சகஜம். அது செவ்வனே நடந்து நாம் முன்னேற்றம் அடைந்திருக்கிறேம் என்பது கண்கூடு. சாதாரணமாக ஆற்றுப் பாசனங்களேப்பற்றி, ஒவ்வொரு ஜில்லாவிலேயும் ஒவ்வொரு தாலுகாவிலும் அணே 1, 2 கட்ட திட்டம் போட்டிருக்கிறூர்கள். ஆனுல் எங்கள் ஜில்லாவில் கோமுகம் என்ற நதியிலிருந்தும் வெள்ளாற்றிலிருந்தும் தண்ணீரைக் கொண்டு கிட்டத்தட்ட பாசனம் 7,000, 8,000 ஏக்கர் பாயச்செய்வதோடு இன்னும் மேலாக 20,000 ஏக்கர் பாய வசதியிருக்கும் என்று சொல்கிறூர்கள். அதிலே முக்கியமாக எங்கள் ஜில்லாவில் கூட இதைப்பற்றி

[Sri M. V. Sudarsanam Naidu] [9th September 1960

நீண்டநாளாகப் பெரும்கிளர்ச்சி இருக்கிறது. சேத்தியாதோப்பு அணையிலிருந்து வெள்ளாறு ஆற்றிலிருந்து, வாலாஜா வாய்க் கால் வழியாக அந்த ஜலத்தைக் கொண்டு வந்து அதன் மூலம் 20,000 ஏக்கருக்குப் பாசனம் பண்ணலாம் என்று பல வருஷங் களாகச் சொல்லி வந்திருக்கிறுர்கள். அதிலே மிகுந்த அனுபவம் படைத்த நமது முந்தைய கவுன்சிலில் மெம்பராக இருந்த 5-30 p.m. எங்கள் ஜில்லா வாசி கடலூர் தாலுகா காலம் சென்ற ராமச் சந்திர படையாச்சி குமாரர் கண்ணுசாமி படையாச்சி ஒரு திட்டத்தை நமக்கு அனுப்பியிருக்கிறுர். அதைக் கவனிப் போமாளுல், 25 ஆயிரம் ஏக்கர் பாயும் என்று கணக்கிட்டு எழுதி இருக்கிறுர். அது உண்மையிலேயே அரசாங்கம் கவனிக்க வேண்டிய விஷயம். எங்கே பார்த்தாலும் பெரும் பங்காகக் கரம்பை நிலங்கள் புஞ்சை நிலங்களாக இருக்கின்றன. அவர் சொல்லக்கூடிய வாலாஜா வாய்க்காலில் இருந்து ஜலத் தைக் கொண்டுவந்தால், அது இந்த ஜில்லாவின் கடலூர் தாலுகா தேவையை வெகுவாக பூர்த்தி செய்யும் என்பது ஒன்று. அடுத்தபடியாக குழாய்க் கிணறுகளைப் பற்றி சொல்கிறுர்கள். எங்கள் ஜில்லாவுக்குக்கூட 250 குழாய்க்கிணறுகளுக்குப் பணம் ஒதுக்குவதாகச் சொல்லியிருக்கிறுர்கள். ஆனல் எங்கள் ஜில்லாவில் விருத்தாசலம், சிதம்பரம், கடலூர், இந்த மாதிரி தாலூகாக்களில் நிறைய குழாய்கிணறுகளுக்கு வாய்ப்பு இருக்கிறது. இப்போதுகூட 50 கிணறுக்கு ஏற்பாடு செய்தார்கள். சாதாரணமாக ஊற்றுப் பெருகி விளைந்த பயிர்கள் எல்லாம் நெய்வேலித் திட்டத்தால் ஊற்று வற்றி அதன் மூலம் தண்ணீர் இல்லாமல் போய்விட்டது. இப்போது 350 அடி கீழே போய் தண்ணீர் எடுத்து அதன் மூலம் வருகிற தண்ணீர் தான் விருத்தாசலம் கடலூர் பகுதிகளில் பூர்த்தியாகிறது. ஆனல் இப்போது அந்த மாதிரி வந்தாலும் கூட மேலே வருகிற ஜலம் குறைவு படுமே ஒழிய அடி ஜலம் குறையாது. அதனல் சில பூமிகளில் பயிர் தாமதமாக வருகிறது. சில இடங்களில் நன்ருக இருக்கிறது. இன்னும் சிரத்தை எடுத்து 250-ஐ மாற்றி 500, 600 ஆக உப காரம் பண்ணலாம். அதில் இரண்டு விதம். ஆர்டீஷியன் தாளுகப் பொங்கக்கூடிய ஜலம் இருக்கிறது. பம்ப் செட் மூலம் இறைக்கும் ஜலமும் இருக்கிறது. பம்ப் செட் என்ருல் 30, 32 அடி குழாய்கள் போதும். அதன் மூலம் இறைக்கலாம். ஆகவே அதை எல்லாம் செய்து விவசாயத்தை விருத்தி பண்ண வேண்டும். இவைகள் எல்லாம் தேவையான விஷயம். தென் ஆற்காட்டில் போட்டிருக்கிற திட்டத்தில் குழாய் அதிகமாகப் போட வழி செய்ய வேண்டுமென்று அரசாங்கத்தாரைக் கேட்டுக் கொள்கிறேன். விவசாயத்தைப் பெருக்குவதோடு கூட, எல்லோருக்கும் முன்னேற்றம் கொடுக் கிருேம். எல்லோருக்கும் எல்லாச் சலுகையும்—உத்யோகஸ்தர் முதற்கொண்டு விவசாயிகள் வரையில் எல்லோருக்கும்—காட்டு கிருேம். ஸ்தல ஸ்தாபனத்திலுள்ள பியூன்கள் வரையில் உதவி செய்கிருேம். ஆனல் கூலி விவசாயிகளைப் பற்றி ஒருவரும் பேசுவ தில்லை. இது ஒரு அடிப்படைத் தத்துவம். அவன் மண்வெட்டி தூக்கவில்லை என்ருல் ஒன்றும் நடக்காது. $\frac{3}{4}$ ரூ. 1 ரூபாய்தான்

9th September 1960] [Sri M. V. Sudarsanam Naidu]

கூலி கொடுக்கிறோம். $1\frac{1}{4}$ ரூபாய் என்று அரசாங்கத்தார் நிர்ணயித்து இருக்கிறார்கள். பெண்களுக்கு $\frac{3}{4}$ ரூபாய் என்று நிர்ணயித்திருக்கிறார்கள். அவர்களைப் பற்றி ஒன்றும் பேசுவதில்லை. யாராவது பேசுவார்களா என்று யோசித்துக் கொண்டு இருந்தேன்.

AN HON. MEMBER: கவர்ன்மெண்டு ரேட்டுப்படி கொடுக்கிறார்கள்.

SRI M. V. SUDARSANAM NAIDU: அது போதாது. சாப்பாட்டுக்கு வசதியில்லை. எப்போது எல்லோருக்கும் போதும் என்றால், அவர்களுக்கு 4 குழந்தைகள் இருக்குமானால் குழந்தைகளும் வேலை செய்யும்போது, போதும். இப்போது கிடைக்கும் வருவாய் போதாது. எல்லோரும் உயர வேண்டும் என்று சொல்கிறோம். விலையைக் கட்டுப்படுத்தினால் விலையேற்றத்தினால் விவசாயிகள் கஷ்டப்படுவார்கள். ஆகவே, இப்போது உள்ளது போல் இருந்தால் இந்த விவசாயிகளுக்கு பொருளாதாரத்தில் உயர்வு எற்படும். வருவாயும் கூடுதலாகும். இவர்களும் தங்களிடம் பொருள் இருக்கும் போது உற்சாகம் கொடுக்கலாம். ஆகவே அந்த முறையை யாரும் கவனிக்கிறதில்லை. சொல்வதும் இல்லை. அம்மாதிரி அவர்களும் உயர வேண்டும் என்று நாம் எல்லோரும் அதற்குப் பாடுபட வேண்டும். இன்னொன்று திருஷ்டாந்தமாகச் சொல்கிறேன். ரோட் (ஐவேஸ்) மேஸ்திரியிலிருந்து எல்லோருக்கும் பண அதிகமாகக் கொடுக்க வேண்டுமென்று சொல்கிறோம். ரோட் சீர்திருத்தம் பண்ணுவதிலும் மண் வெட்டிப் போடுவதிலும் மரஞ்செடிகளைக் கவனிப்பது இவர்களுக்குக் கூலி போதுமானதாக இல்லை. அவர்களுக்குப் போதுமானது இல்லை என்று கேட்க யாரும் இல்லை. எல்லோருக்கும் கூலி உயர வேண்டுமென்று சொல்கிற போது— இவர்களைக் கவனிப்பாரில்லை. இதில் எல்லா ஜாதியினரும் வேலை செய்கிறார்கள். அவர்களுக்காக யாரும் சொல்வாரில்லை, கேட்பாரில்லை. தாழ்ந்தவனை உயர்ந்த மகாத்மா தான் பாடுபட்டார்; நாமெல்லாம் சொல்கிறோமே தவிர உயர்த்துவதில்லை. அவர்களை உயர்த்த அரசாங்கம் எவ்வளவோ பெரிய வேலை செய்கிறது. தாழ்ந்த கூலி உடையவர்களை நாம் ஒரு கண் பார்க்க வேண்டும் என்று அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்கிறேன். அவர்கள் நன்றாக வாழ வேண்டுமென்றால் நாம் அவர்களுக்குப் பரிவு காட்ட வேண்டும். அவர்கள் வாடி வதங்கிக் கொண்டு இருக்கும் போது நாம் உயர வேண்டும் என்று சொல்வதில் அர்த்தம் இல்லை. அதோடு இன்னும் நமக்கு வேண்டிய பல வசதிகளை அரசாங்கம் செய்வதற்கு ஐந்தாண்டுத் திட்டத்தில் நிறைய இருந்தாலும் கூட எனது நண்பர்கள் பல்வேறு விஷயத்தைப் பற்றிச் சொன்னார்கள் கைத்தறி விஷயம் பற்றிச் சொன்னார்கள். எனக்குக் கூட என்ன படுகிறது என்பதைத் தெரிவிக்க விரும்புகிறேன். கைத்தறி சோர்ந்து இருந்ததை 1946-ம் வருஷம் நாங்கள் ஜெயிலிலிருந்து வெளியே வந்த போது பார்த்தோம். அப்போது பட்டினி பசி எல்லாம் இருந்தது. இன்றைக்கு அதெல்லாம் இல்லை. குடும்பத்தை

5-40 p.m.

எப்படியோ சமாளித்துக் கொண்டு இருக்கிறார்கள். அப்போது பல இடங்களில் சாவு பட்டினி. அந்த மாதிரி இல்லாமல் இந்த அரசாங்கம் பல சௌகரியங்களை செய்து வருகிறது. அம்மாதிரி சம்பவங்கள் இல்லாமல் இந்த 13 வருஷ ஆட்சியில் ஒரு மாதிரி அவர்களின் வாழ்க்கையை ஸ்தரப்படுத்திவிட்டது. அந்த வாழ்க்கை போதாது. சில நண்பர்கள் சொல்லியது போல், விசைத் தறியைக் கொண்டு வந்தால் கைத் தறி படுத்துவிடும். அதில் ஆட்சேபனை கிடையாது. விசைத் தறியினால் உற்பத்தி அதிகமாகலாம். அது "விஷத்தறி" தான். என்ன ஆகும் என்றால், கைத்தறி போய்விடும். உண்மையிலேயே கைத்தறி வளர வேண்டும் என்றால், அதற்கு ஆக்கம் கொடுக்க வேண்டுமென்றால், நாம் எல்லாவித உதவியையும் செய்ய வேண்டும். நண்பர் சம்பந்தம் அவர்கள் சொன்னார்கள் கைத்தறியைப் பற்றி. அனுபவம் உடையவர்கள் அவர்கள். எனக்கு அனுபவம் கிடையாது. நான் பார்க்கிறேன். ஆங் காங்கு நடக்கக்கூடிய சம்பவங்கள் தெரியும். இன்றைக்கும் கைத்தறிக்காரர்கள் ரொம்பக் கஷ்டப்படுகிறார்கள். சில சமயம் கூலி ஏறுகிறது. சில சமயங்களில் கூலி குறைகிறது. அந்த மாதிரியான சமயங்களில் அவர்களுக்குக் கஷ்டம் ஏற்படு கிறது. இதுவெல்லாம் எனக்கு அனுபவபூர்வமாகத் தெரியும். கைத்தறிக்காரர்களுக்கு போதுமான வசதிகள் செய்ய வேண்டும். விசைத் தறியில் ஒரு நாளில் செய்யும் வேலையை கைத்தறி நெசவாளர்கள் மூன்று நாட்களில் செய்வார்கள். எனவே, கைத்தறி நெசவுத் தொழிலுக்கு ஆக்கம் கொடுத்து கைத்தறி நெசவாளர்களை முன்னுக்குக் கொண்டுவர வேண்டியது அரசாங்கத்தின் கடமை என்று சொல்லிக்கொண்டு, என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

* DR. A. CHIDAMBARANATHAN: மதிப்பிற்குரிய மன்றத் தலைவர் அவர்களே, இந்தியா முழுவதற்குமான அடுத்த ஐந்தாண்டுத் திட்டத்தில் கல்விக்கென 500 கோடி ரூபாய் ஒதுக் கப்பட்டிருக்கிறது. அதில் 130 கோடி ரூபாய் தொழில் நுணுக் கக் கல்விக்காகவும் எஞ்சிய 370 கோடி ரூபாய் மற்றைய கல்விக் காகவும் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இவ்வாறு ஒதுக்கப்பட்டுள்ள தொகையில் சென்னை மாநிலத்திற்கு 35 கோடி ரூபாய் பங்கு பெறலாம் என உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. அந்த 35 கோடி ரூபாயை நமது சென்னை மாநிலம் செமித்துவிட முடியும் என்பது உறுதி. ஏனென்றால் முதல் இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களில் நமக்கென்று ஒதுக்கப்பட்ட பணத்தை நாம் செமிக்கச் செய் திருக்கிறோம். ஏனைய சில மாநிலங்கள் அவைகளுக்கு ஒதுக்கி வைக்கப்பட்ட பணத்தை முழுதும் செமிக்க முடியாத நிலையில் இருந்திருக்கும்போது, நாம் நமக்கென ஒதுக்கப்பட்ட பணத்தை நன்றாகச் செமிக்கச் செய்திருப்பதால், பணம் முழுவதையும் நல்ல வகையில் பயன்படுத்தியிருப்பதால், நாம் மூன்றாவது திட்டத்தில் 35 கோடி ரூபாய்க்கும் மேல் அதிகமாகப் பணம் பெறுவதற்கு உரிமை உடையோம் என்பதை அரசாங்கத்திற்கு வற்புறுத்திக் கூறுகிறேன். ஒதுக்கப்பட்ட பணம் முழுவதையும் நன்றாகப் பயன்படுத்தி இரண்டாவது திட்டத்தைத் திறமையுடன் நடத்தியதற்காக அமைச்சரவையை பாராட்டுகிறேன்.

9th September 1960] [Dr. A. Chidambaranathan]

இந்த மூன்றுவது திட்டத்தில் சில பகுதிகளில் ஒதுக்கப்பட்டிருக்கும் தொகைகளைப் பார்த்தால், அவை கொஞ்சம் போதாது, கொஞ்சம் என்ன, மிகவும் போதாது என்றுதான் தோன்றுகிறது. இத்திட்டத்தில் இம்மாநில அரசாங்கத்தின் பங்காகக் கேட்கப்பட்டிருக்கின்ற 35 கோடி ரூபாயில், 22 கோடி ரூபாய் தொடக்கநிலைக் கல்விக்காகவும், $10\frac{1}{2}$ கோடி ரூபாய் உயர்தரப் பள்ளிக்கூடக் கல்விக்காகவும், 65 லட்சம் ரூபாய் கல்லூரிக் கல்வி, பல்கலைக்கழகக் கல்வி ஆகியவைகளுக்காகவும் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இதில், தொடக்கநிலைக் கல்விக்காக 22 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருப்பது அதிகம் என்று நான் சொல்ல மாட்டேன். காரணம், 6 முதல் 11 வயது வரையுள்ள குழந்தைகளுக்கு அடுத்த திட்டத்தில் கட்டாயக் கல்வி அளிக்க வாய்ப்பும் வசதியும் ஏற்பட இது உதவும். பல்கலைக்கழகக் கல்விக்காக 65 லட்சம் ரூபாய் மாத்திரமே ஒதுக்கியிருப்பது போதாது. இது அடுத்த ஐந்தாண்டுகளில் நாம் செலவிடவிருக்கும் பணத்தில் எந்த விகிதத்தில் இருக்கிறது என்று பார்ப்போம்; அடுத்த ஐந்து ஆண்டுகளில் நாம் கல்விக்காகச் செலவிடவிருக்கும் ரூபாயில் 2 சதவிகிதம் தான் பல்கலைக் கழகக் கல்விக்கென ஒதுக்குகிறோம். பல்கலைக்கழகக் கல்விக்கென ஒதுக்கப்பட்டுள்ள இந்த 65 லட்ச ரூபாயும் எவ்வாறு ஈவுபடுத்தப்பட்டிருக்கிறது என்று பார்ப்போம். இது கல்லூரி விடுதிகள் கட்டுவதற்கு 15 லட்ச ரூபாய், சென்னை நகரத்திலுள்ள மாநிலக் கல்லூரிக்கு 14 லட்ச ரூபாய், புதுப் பல்கலைக் கழகம் நிறுவுவதற்கு 30 லட்ச ரூபாய் என்று ஈவுபடுத்தப்பட்டிருக்கிறது. புதுப் பல்கலைக்கழகம் நிறுவுவதற்கு 30 லட்ச ரூபாய் எவ்வாறு போதும் என்று எனக்குத் தெரியவில்லை. அந்தப் பணத்தில் இரண்டு, மூன்று முதல்தரக் கல்லூரிகளை நடத்த முடியும். அதற்குத் தான் அந்தப் பணம் போதும் என்று நான் நினைக்கிறேன். இந்த நூற்றூண்டில் ஒரு கோடி ரூபாய்க்குக் குறைந்த பணத்தில் ஒரு பல்கலைக்கழகத்தை நிறுவ முடியும் என்று நான் நினைக்கவில்லை. நம் மாநிலத்தில் ஏனைய மாநிலங்கள் போல விஞ்ஞானக் கலை வளர்ச்சி உயர்நிலைப் பள்ளிக்கூடங்களிலும் கல்லூரிகளிலும் நன்ருக ஏற்படவில்லை. இங்கே சென்ற ஐந்தாண்டுகளில் விஞ்ஞானக் கலையில் கல்லூரி வழியாகப் பட்டம் பெற்றவர்கள் மிகக் குறைவு. இந்நிலையில், விஞ்ஞானத் துறைக் கல்வியில் மாநிலக் கல்லூரி அல்லாத ஏனைய கல்லூரிகளின் வளர்ச்சிக்கென ஏன் 15 அல்லது 20 லட்ச ரூபாய் ஒதுக்கப்படவில்லை என்பது எனக்குத் தெரியவில்லை. எனவே, நமது மாநில அரசாங்கம் பல்கலைக்கழக மானியக் குழுவிடம் வற்புறுத்தி பல்கலைக்கழகக் கல்விக்காக அதிகப் பணம் பெறும் என்று நினைக்கிறேன். 30 லட்ச ரூபாயில் மதுரையில் ஒரு பல்கலைக்கழகத்தை அமைக்கக்கூடும் என்று அமைச்சரவை...........

THE HON. SRI R. VENKATARAMAN: இந்த 30 லட்ச ரூபாய் ஒரு டோகன் கிரான்ட் தான். இந்தப பணத்தில் ஒரு யுனிவர்ஸிடி வைக்கமுடியும் என்று ஒருவரும் நினைக்கவில்லை.

[9th September 1960

DR. A. CHIDAMBARANATHAN: மாதிரியாகவே இந்தத் தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது என்பதை நான் அறிவேன். இந்தத் தொகையைக் கேட்டுக் கொண்டிராமல் ஒரு கோடி ரூபாயையே ஒதுக்கிவிடும்படி நமது அரசாங்கம் கேட்க வேண்டும். தேவையான அதிகப் பணத் தொகையை மானியக் குழுவிடம் நமது அரசாங்கம் வற்புறுத்திக் கேட்க வேண்டும் என்பதற்காகத்தான் இவ்வாறு கூறிகிறேனே தவிர, 30 லட்சம் ரூபாயில் ஒரு பல்கலைக்கழகம் அமைத்துவிட முடியும் என்று அரசாங்கம் கருதிவிட்டதாக நான் எண்ணவில்லை என்பதை எடுத்துக்காட்ட விரும்புகிறேன்.

இன்னொன்று சொல்ல விரும்புகிறேன். சர். எஸ். ராதா கிருஷ்ணன் தலைமையில் அமைக்கப்பட்டிருந்த பல்கலைக்கழகக் குழு ஒன்று 1949-ல் ஓர் அறிக்கை வெளியிட்டிருக்கிறது. அந்த அறிக்கையின் வாயிலாகப் புலப்படும் சில செய்திகள் இப்போது என் நினைவிற்கு வருகின்றன. தமிழ்நாட்டில் திருச்சி போன்ற நடுவிடத்தில் கற்பித்து இணைத்துக்கொள்ளும் பல்கலைக்கழகம் ஒன்றை விரைவில் அமைக்க வேண்டும் என்று அந்த அறிக்கையில் கூறப்பட்டிருக்கிறது. இதைக் கூறும்போது அக்குழு திருச்சி போன்ற நடுவிடத்தில் என்று சொல்லியிருக்கிறதே தவிர, திருச்சியில்தான் என்று சொல்லவில்லை. ஆகவே பல்கலைக்கழகத்தை மதுரை போன்ற நடுவிடத்தில் ஏன் அமைக்கக்கூடாது என்பது என் கேள்வி. புதுப் பல்கலைக் கழகத்தை என் சொந்த ஊருக்குக் கொண்டுபோக வேண்டும் என்று நான் விரும்பவில்லை. மதுரை என் சொந்த ஊரும் அன்று. இப்போது, சென்னைப் பல்கலைக்கழகம் மதுரையில் தான் பட்டப்படிப்பிற்கு மேற்பட்ட படிப்பிற்கு(Post graduate stuties) உரிய ஏற்பாடுகளைச் செய்து, ஆராய்ச்சிக்கு வழிகோலியிருக்கிறது. அவ்வாறு செய்து, சென்னைப் பல்கலைக்கழகம் அதை இரண்டாவது பல்கலைக்கழகக் கேந்திரமாக வளர்த்து வந்திருக்கிறது. எனவே, மதுரையில் இட வசதி இருப்பதாலும், அங்கே புதுவதாக மருத்துவக் கல்லூரி அமைக்கப்பட்டிருப்பதாலும், பொறியியல் கல்லூரி அமைக்கப்பட்டிருப்பதாலும், அங்கே ஏன் புதுப் பல்கலைக்கழகத்தை அமைக்கக்கூடாது என்று கேட்க விரும்புகிறேன்.

MR. CHAIRMAN: The hon. Member will please finish his speech so on.

DR. A. CHIDAMBARANATHAN: Sir, I thought you gave me ten minutes. I began only at 5-45, Sir.

MR. CHAIRMAN: The hon. Member started at 5-40. However, let him continue.

DR. A. CHIDAMBARANATHAN: 1923-ம் ஆண்டு நிறைவேறிய சென்னை பல்கலைக்கழகச் சட்டத்தின் (Madras University Act) அடிப்படையில் புதுப் பல்கலைக்கழகங்கள் அமைக்கப்பட வேண்டும் என்பது ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளது. எங்கெல்லாம் பட்டப்படிப்புக்கும் மேற்பட்ட படிப்புக்கும் ஆராய்ச்சிக்கும் ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளனவோ அங்கெல்லாம் உயர்தரக்

9th September 1960] [Dr. A. Chidambaranathan]

கல்லூரிப் படிப்பிற்கும் ஆராய்ச்சிக்கும் செய்யப்பட்டுள்ள (Co-ordination and concentration for higher teaching and research) ஏற்பாடுகளை ஒருமைப்படுத்தியும் ஒருமுகப்படுத்தியும் புதுப் பல்கலைக்கழகம் அமைக்கப்பட வேண்டும் என்று கூறப் பட்டிருக்கிறது. இந்த முறையில் மதுரை, புதுப் பல்கலைக்கழகம் அமைக்கப்படுவதற்குத் தக்க இடம் என்று தோன்றுகிறது. மேலும் ஒரு பல்கலைக்கழகம் அமைப்பதனால், கோயம் புத்தூரோ, திருச்சியோ அதற்கு வாய்ப்புப் பெறும் என்று நினைக்கிறேன். 5.50 p.m.

அடுத்தபடியாக, உயர்தரப் பள்ளிக்கூடங்களை மேல் உயர்தர பள்ளிக்கூடங்களாக ஆக்குவது பற்றி என்னுடைய இரண்டொரு கருத்துக்களைத் தெரிவிக்க விரும்புகிறேன். இப்போதுள்ள திட்டப்படி, இந்தியா முழுவதிலும் 9,000 உயர்நிலைப் பள்ளிகள் மேல் உயர்நிலைப் பள்ளிக்கூடங்களாக ஆக்கப்படவிருக்கின்றன. நம் மாநிலத்தில் ஏறத்தாழ 1,000 உயர்நிலைப் பள்ளிகள் இருக்கின்றன. அவைகளில் 200-ஐயே மேல் உயர்நிலைப் பள்ளிகளாக ஆக்க வழிவகை கண்டிருக் கிறோம். இது போதாது என்பது என் அழுத்தந் திருத்தமான நம்பிக்கை. ஏனென்றால் இப்போது இங்கே மொத்தம் 1,000 உயர்நிலைப் பள்ளிகள் இருக்கும்போது, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் அவற்றில் 200 பள்ளிகளையே மேல் உயர்தரப் பள்ளிகளாக ஆக்கினால், அதற்கடுத்து வரும் ஐந்தாண்டுகளில் 80 சதவிகித பள்ளிக்கூடங்களையா மேல் உயர்தரப் பள்ளிக்கூடங்களாக ஆக்கிவிடப் போகிறோம்?

நம்முடைய கல்வித்துறையில் வெள்ளையறிக்கையில் இன்னும் 10 ஆண்டில் எல்லா உயர்தரப் பள்ளிகளும் மேல் உயர்தரப் பள்ளிகளாக ஆக்கப்படும் என்று எதிர்பார்க்கப்பட்டது. அத னால், அதற்கான வழிவகைகளைக் கண்டு, உயர்தரப் பள்ளிக் கூடங்கள் இன்னும் அதிக எண்ணிக்கையில் மேலுயர்தரப் பள்ளிக்கூடங்களாக ஆக்கப்பட வேண்டும் என்று வற்புறுத்து கின்றேன். அதுமட்டுமல்ல. மேலுயர்தரப் பள்ளிக்கூடங்களை அமைக்கும்பொழுது, நகரங்களிலுள்ள கல்லூரிகளோடு வீண் போட்டி போட்டு, அக்கல்லூரிகளுக்கு வரும் மாணவர்களைப் பங்கு போட்டுக் கொள்ளாமல், நாட்டுப்புறத்திலும், கிராமப் புறத்திலும் உள்ள உயர்தரப் பள்ளிகளை மேலுயர்தரப் பள்ளி களாக ஆக்குவோமேயானால்தான் நாம் செய்ய வேண்டிய கடமையைச் செய்தவர்களாவோம் என்று எடுத்துக்காட்ட விரும்புகிறேன். பள்ளிக்கூடங்கள் திறந்தால் வேண்டிய அளவு பயிற்சி பெற்ற ஆசிரியர்கள் கிடைக்கமாட்டார்கள் என்று சொல்லும் காரணம் எனக்குப் பொருத்தமாகத் தோன்றவில்லை. ஐந்து ஆண்டுகளுக்குள்ளே, போதிய அளவு ஆசிரியர்களுக்கு வாய்ப்பும் வசதியும் கொடுத்தால் பயிற்சிபெற்ற ஆசிரியர்களை பெற்றிருக்கலாமே என்று கேட்கிறேன். மேலுயர்தர வகுப்பு ஆசிரியராவதற்கு எம்.ஏ., எம். எஸ்ஸி. பட்டம் பெற்றவர்களே தகுதியுள்ளவர்கள் என்று கருதுவார்களேயானாலும், அது காரணமாக உயர்தரப்பள்ளிகளை மேலுயர்தரப் பள்ளிகளாக ஆக்குவதில் தடையிருக்கக் கூடாது என்பது என் விழைவு.

10-வது வகுப்புக்கு ஆசிரியராக இருப்பவர் 11-வது வகுப்புக்கு ஆசிரியராவதற்குத் தகுதியுடையவரல்லர் என்று சொல்வதை நான் நம்ப முடியவில்லை. 11-வது வகுப்புக்கு ஆசிரியராகப் போதற்கு ஒரு நிபந்தனை வைத்துக்கொண்டால் போதும். 15 ஆண்டுக்குக் குறையாத ஊழிய அனுபவம் உள்ளவர்களாக இருந்தால் அவர்களை வைத்து 11-வது வகுப்புப் பாடம் நடத்த அடுத்த 5 ஆண்டுகளுக்கு மாத்திரமாவது வழிவகை செய்ய வேண்டும். நாம் எதிர்பார்க்கும் அளவுக்கு உயர்தரப் பள்ளிகளை மேலுயர்தரப் பள்ளிகளாக ஆக்குவதற்கு ஆசிரியரில்லாத குறை காரணமாக இருக்கக் கூடாது என்று கூறிக் கொண்டு முடித்துக் கொள்கிறேன்.

* VIDWAN T. MUTHUKANNAPPAN: தலைவர் அவர்களே! ஆங்கிலேயர்கள் சுரண்டிச் சூறையாடியதால் வறண்ட பாலைவனமான நம் நாட்டைச் சோலைவனமாக்குவதற்காகத் தீட்டப்பட்டதுதான் இந்த ஐந்தாண்டுத் திட்டங்கள். நல்ல வெற்றி கண்டிருக்கிறோம் இந்த இரண்டு ஐந்தாண்டு திட்டங்களிலேயும். பொற்காலம் வந்துகொண்டிருக்கிறது. இந்த மூன்றுவது ஐந்தாண்டுத்திட்ட அறிக்கையில் பல அங்கத்தினர்கள் பல விஷயங்களைப்பற்றிப் பேசினுர்கள். ஆனுல் ஒருவரும் பேச மாட்டார்கள் என்று நினைக்கிற ஒரு தனிப்பட்ட விஷயத்தைப் பற்றி மாத்திரம் நான் பேசி முடித்துக் கொள்கிறேன். அது மீன் வளத்தைப் பற்றியது. இந்த அறிக்கையிலே—தமிழிலே—19-வது பக்கத்திலே "அத்தியாயம் V" என்ற தலைப்பிலே வெளியிடப்பட்டிருக்கிறது. இங்கே தவறு ஒன்று செய்திருக்கிறுர்கள். ஆங்கிலத்திலும் அப்படித்தான் இருக்கிறது. "சென்னை மாநிலத்தில் 620 மைல் அளவுக்கு நீண்ட கடல் இருக்கிறது. நானூற்று பதினைந்து உள் நாட்டு 242 கடலோர உள் நாட்டு 415 கடற்கரை கிராமங்கள் இருக்கின்றன மீன்பிடி கிராமங்கள் இருக்கின்றன" என்று அச்சிடப்பட்டிருக்கிறது. இதை மாற்றிவிட்டிருக்கிறுர்கள். 242 என்று தான் இருக்க வேண்டும். இதை அரசியலார் திருத்திக் கொள்வார்கள் என்று நம்புகிறேன்.

அடுத்தபடியாக, நம்முடைய நாடு இந்தத்திட்ட அடிப்படையில் முன்னேற வேண்டுமானுல் உணவு தான் மிக மிக முக்கியமானது. பயிர்த்தொழில் சிறந்த முறையில் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலும் முன்னேறியிருக்கிறது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் அதற்கு 10 கோடி ஒதுக்கப்பட்டது. மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 27·34 கோடி ஒதுக்கப்பட்டிருக்கிறது. நிலத்திலே இருந்து கிடைக்கும் உணவுக்காக, அதேமாதிரி நீரிலே இருந்து கிடைக்கும் மீன் வளத்தைப் பெருக்குவதற்கு நம் அரசாங்கமும் மத்திய அரசாங்கமும் இன்னும் அதிகம் முயல வேண்டும். நம் அரசாங்கத்தைப் பொறுத்தவரையில் மீன் வளத்துக்காக இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 0·85 கோடியும் மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 3·62 கோடியும் நிதி ஒதுக்கியிருக்கிறுர்கள். இது மகிழ்ச்சி தரத்தக்கதாகவே இருக்கிறது. இந்த அறிக்கையைப் பார்த்தால் மொத்தத்தில் நம்

9th September 1960] [Vidwan T. Muthukannapan]

நாட்டிலே மீன் செல்வத்தை அவ்வளவு அதிகமாகப் பெருக்குவதாகத் தோன்றவில்லை. முதல் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் ஒரு மில்லியன் மெட்ரிக் டன் எடையுள்ள மீன்தான் பிடிக்கப்பட்டது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் 1·4 மில்லியன் மெட்ரிக் டன், அதாவது 0·4 மில்லியன் மெட்ரிக் டன் தான் அதிகமாகப் பிடிக்கப்பட்டது. மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் 1·8 மில்லியன் மெட்ரிக் டன் தான் பிடிக்கப்படும். அதாவது 0·4 மில்லியன் மெட்ரிக் டன் தான் அதிகமாகிறது. அது நாம் சாப்பிடும் அளவில் 10 அல்லது 20-ல் ஒரு பங்குக்குக்கூட இல்லை. அரசாங்கத்தார் இதை நன்றுக உணர்ந்திருக்கிறுர்கள். ஏன் மீன் வளம் அதிகமாக இல்லை என்று அவர்களுக்கு தெரிகிறது. மீனவர்கள் தங்கள் நிலையில் உயரவில்லை. அவர்களுக்கு மீன்பிடி கருவிகள் சரியாக இல்லை. விஞ்ஞான ரீதியில் மீன்பிடிக்க முடியவில்லை என்று உணர்ந்து அதற்காகத் திட்டமிட்டு இருக்கிறுர்கள். உலகம் தோன்றிய காலத்திலே இந்த மீனவர்கள் என்ன நிலையில் இருந்தார்களோ, 4, 5 கட்டைகளைக் கட்டிக் கொண்டு, கயிறு வலை எடுத்துக்கொண்டு வலையைப் போட்டு மீன் பிடித்து, கோவணுண்டிகளாக இருந்தார்களோ, அதே நிலையில் தான் நாகரீகம் மிகுந்த இன்றும் இருக்கிறுர்கள். ஓரளவு முன்னேறி இருக்கிறுர்கள் என்று சொல்லலாம் அவ்வளவுதான். ஆனுல் போதிய அளவு முன்னேறவில்லை. அதனுல் நன்றுக ஆராய்ந்து ஆழ்கடலில் மீன் பிடிக்கும் திட்டத்தை விஸ்தரிக்க வேண்டும் என்று மூயன்யு- வருகிறுர்கள் அரசியலார்கள்.

செங்கற்பட்டு, தென்னுற்காடு மாவட்டங்களையும் சென்னையையும் எடுத்துக்கொண்டால், இங்கேதான் மிக மிகக் குறைவாக மீன் பிடிக்கப்படுகிறது. தஞ்சாவூர் இராமநாதபுரம், திருநெல்வேலி, கன்னியாகுமாரி போன்ற இடங்களில் மீன் ஏராளமாகக் கிடைக்கிறது. அங்கே ஒருவர் நாள் ஒன்றுக்குச் சராசரி 2 அல்லது $2\frac{1}{2}$ ரூபாய் சம்பாதிக்கிறுர்கள். ஆனுல் இங்கே உள்ளவர்களுக்கு 14 அணுவுக்கு மேல் வருமானம் இல்லை. காரணம். இந்த இடங்களில் கடலில் 3 அல்லது 4 மைலுக்குள் அவ்வளவாக மீன் பெருக்கம் இல்லை. மீனவர்கள் தங்கள் கட்டுமரங்களில் அதற்குமேல் செல்வது கஷ்டம். 15 மைல் 20 மைல் ஆழ்கடலில் சென்றுல் மீன் வளம் அதிகமாக இருக்கிறது என்று விஞ்ஞான முறையில் இப்போது கண்டிருக்கிறுர்கள். பல ஆண்டுகளுக்கு முன்னுலேயே மீனவர்கள் இதைக் கண்டிருக்கிறுர்கள். அவ்வளவு தூரம் போக விசைப் படகுகள் இருந்தால்தான் முடியும். கிட்டத்தட்ட $3\frac{1}{2}$ லட்சம் மீனவர்கள் இருக்கிறுர்கள். இவர்களுக்கு இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டப்படி 152 விசைப் படகுகள் கொடுக்கப்பட்டன. அதுவும் சென்னை செங்கற்பட்டில் 18 படகுகள் தான் என்று நினைக்கிறேன். கொடுக்கப்பட்ட படகுகளும் கூட ஏழைகளுக்குக் கொடுக்கப்படவில்லை என்று நான் வருத்தப்படுகிறேன். இந்தச் சமூகத்தில் பணக்காரர்கள் பணக்காரர்களாகிக் கொண்டு வருகிறுர்கள். ஏழைகள் ஏழைகளாகவே தேய்ந்து கொண்டு வருகிறுர்கள். உரிய இடத்துக்கு அந்த வசதிகள் போவதில்லை. ஏழை—பாமர மீனவர்களுக்கு அரசாங்கம் செய்யும் வசதிகள் சரிவரக்

கிடைப்பதில்லை. இவற்றை யெல்லாம் அரசாங்கம் கண்டறிந்து தடுத்து ஏழை மீனவர்கள் பயன்பெறத் தக்க நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

மீன்பிடி துறைமுகங்கள் போதுமான அளவு கட்டப்பட வேண்டும். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நாகப் பட்டணம், கடலூர், இராயபுரம் இந்த மூன்று இடங்களிலும் கட்டுவதாக இருந்தது. ஆனல் இப்போது தான் இரண்டாம் திட்ட முடிவில்தான் கடலூரில் துவக்கியிருக்கிறார்கள். மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் தான் அதை முடிப்பார்கள் என்று நினைக்கிறேன். அந்த மூன்று மீன்பிடி துறைகளையுமே இம் மூன்ருவது திட்டத்தில் முடித்துவிட வேண்டும். இல்லாவிட்டால் மீனவர்கள் மிகவும் கஷ்டப்படுவார்கள்.

6-00 p.m.

குளிரறைச் சாதனம் இப்போது போதுமான அளவு இல்லை. தூத்துக்குடி, மேட்டூர் அணை, நாகபட்டினம், கடலூரில் மட்டும் தான் குளிர் சாதனம் இருக்கிறது. சென்னையில் ஒன்று கூட இல்லை. உங்களுக்குத் தெரியும். மீன் ஒரு குறிப்பிட்ட கால அளவு தான் கெடாமல் இருக்க முடியும். அதற்கு மேல் அது கெட்டுவிடும். ஏழை மீனவ மக்கள் சாலை ஓரத்திலும், கடற் கரை மணலிலும் மீனைக் காயவைத்து விடுகிறார்கள். காயவைத்தால் அப்பக்கம் சென்ருல் கொஞ்சம் அருவருப்பாக இருக்கும். ஆனல் அந்த ஏழை மக்கள் என்ன செய்ய முடியும்? அவைகளை அழித்துவிட முடியாது. குளிரறைச் சாதனம் இருந்தால் அதில் இம் மீன்களை வைத்துக் கெட்டுப்போகாமல் பாதுகாக்கலாம். அப்போது பொதுமக்களுக்கும் குறைவான விலையில் மீன் கிடைக்கும். மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் 12 ஐஸ் நிலையங்கள்—குளிரறைச் சாதனங்கள் ஆரம்பிப்பதாக இருக்கிறது. அதில் குறைந்தது இரண்டாவது சென்னைக்கும் ஒன்ருவது செங்கற்பட்டுக்கும் வேண்டும்.

மீன் வண்டிகள் இல்லாதது பெரிய குறை. பிடித்துவரும் மீன் கடைக்குப் போய்ச்சேர நேரம் ஆகிறது. 1947-48-ல் அரும் பாடுபட்டு இந்த வண்டி முறையைக் கொண்டுவந்தோம். இது வரை மொத்தம் 8 வண்டிகள் தான் இருக்கின்றன என்று நினைக்கிறேன். அவற்றில் பல அடிக்கடி கெட்டுப் போகின்றன. அதனல் அவற்றைப் பயன்படுத்தும் மக்கள் மிகவும் கஷ்டப்படுகிருர்கள். இதற்கென்று குறைந்தது 10 லட்ச ரூபாயாவது ஒதுக்கி 60, 70 வண்டிகளாவது வாங்க வேண்டும். ஒவ்வொரு மாவட்டத்திற்கும் 10 வண்டிகளாவது இருக்க வேண்டும். இப்போதுள்ள வண்டிகளை மீனவப் பெண்மணிகள் பயன்படுத்துவதில்லை. காரணம், மீனைத் தலைச்சுமையாகக் கொண்டுபோனல் சுமார் $1\frac{1}{2}$ ரூபாய் லாபம் கிடைக்கும். அவைகளை வண்டியில் வைத்துக் கொண்டுபோனல் வண்டிச் சத்தத்திற்கு ஒரு ரூபாய், $1\frac{1}{4}$ ரூபாய் கொடுக்க வேண்டியிருக்கிறது. அந்த வண்டிச்சத்தம் போக $\frac{1}{4}$ ரூபாயைக் கொண்டு அவர்கள் உயிர்வாழ முடியுமா? எனவே இந்தத் திட்டம் தோல்வியாக—"அட்டர் பெய்ல்யூர்" ஆக—இருக்கிறது. ஆதலால் கொஞ்ச காலத்திற்கு அரசாங்கம் பாதிக் கட்டணச் சலுகை கொடுக்க வேண்டும். அப்படிச் செய்தால் தான் அந்த மக்கள் முன்னுக்கு வர முடியும்.

அடுத்தபடியாக, மீனவர்களுக்கு போக்குவரத்துச் சாலைகள் கிடையாது. இப்போது பொதுச் சாலைகளுக்கும் குப்பங்களுக்கும் நெடுந்தூரம் இருக்கிறது; பல மைல் தூரம் இருக்கிறது. வழியில் மணல் காடுகள் இருக்கின்றன. தலைச்சுமையோடு அந்த மணல் காடுகளைக் கடந்து வருவது கஷ்டம். குப்பங்களிலிருந்து பொது ரோடுகளுக்குக் கிளைச்சாலைகள் போட வேண்டும். அரசாங்கத்தார், ஒன்றரை ஆண்டு முறையிட்டதன் காரணமாக, சம்பத்தில் ஒரு உத்தரவு பிறப்பித்திருக்கிறார்கள்; செங்கற்பட்டு, சைதாப்பேட்டை ஆகிய தாலுக்காக்களில் உள்ள குப்பங்களுக்கு 1,16,000 ரூபாய் செலவில் பாதைகள் உடனடியாக அமைக்க உத்தரவிட்டிருக்கிறார்கள். பக்கிங்காம் கால்வாய்க்குக் குறுக்கே பாலங்கள் கட்ட ரூ. 50 ஆயிரம் அளித்திருக்கிறார்கள். இதற்காக மீனவர்கள் சார்பில் அரசாங்கத்திற்கு நன்றி செலுத்திக் கொள்கிறேன். இதைச் செய்துள்ள அரசாங்கத்தைப் பாராட்டுகிறேன்.

அடுத்து, ஒவ்வொரு மீனவக் குடும்பத்திலும் உப தொழில் இன்றி வயதானவர்களும் பெண்களும் வருந்துகின்றனர். எனவே இவர்களுக்குக் குடிசைத் தொழில்கள் ஏற்படுத்தித் தர வேண்டும். நூல் நூற்பது ரொம்பப் பயன் தரும். கயிறு திரிக்கும் தொழிலையும் இவர்கள் செய்யலாம். இந்தத் தொழில்களை மீனவர்கள் இருக்கும் இடங்களில் வளர்த்தால், அவர்களில் ஆண்கள் மட்டுமின்றி, பெண்களும், வயதானவர்களும் இந்தத் தொழில்களில் ஈடுபட்டு வருமானத்தைப் பெருக்கித் தங்களை நல்லமுறையில் பாதுகாத்துக்கொள்ள முடியும். எனவே இவர்கள் இருக்கும் இடங்களில் குடிசைத் தொழில்களை அமைக்க வேண்டும் என்று அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்து, வீடு அமைப்புத் திட்டத்தைப் பற்றிச் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இந்த விஷயத்தில், மீனவர்களுக்கு வீடு கட்டித் தருவதைப்பற்றி ஒன்றும் கூறப்படவில்லை. ஹரிஜனங்களுக்காக 6 கோடி ரூபாய் செலவில் 90,000 வீடுகள் கட்டப் போகிறார்கள். இதை நான் வரவேற்கிறேன். அவர்களுக்கு 6 கோடி ரூபாய் போதாது, 10 கோடி ரூபாய் கூடச் செலவழிக்கலாம்; அவர்கள் நொந்து, நைந்து போயிருக்கிறார்கள். அப்படியே மீனவர்களுக்காகவும் வீடுகள் கட்ட வேண்டும். மீனவர்களுக்காக 10 லட்ச ரூபாய் செலவிலாவது வீடுகள் கட்ட வேண்டும். அறுநூற்று ஐம்பது மீனவர் கிராமங்கள் இருக்கின்றன. இந்த மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஒவ்வொரு கிராமத்திலும் 10 வீடுகள் வீதம் குறைந்தது 6,000 வீடுகளாவது கட்டினாலும் போதும் என்று கனம் அமைச்சருக்குச் சொல்லிக்கொள்கிறேன்.

அடுத்து, பள்ளி செல்லும் ஹரிஜனப் பெண் குழந்தைகள் ஒவ்வொருவருக்கும் ஒரு ஜதை உடை கொடுக்கப்போகிறார்கள். இதற்காக 315 லட்ச ரூபாய் செலவழிக்கப் போகிறார்கள். சீர் தூக்கிப்பார்க்கும்போது, எந்த சமூகத்திலும் பெண்கள் முன்னுக்கு வந்தால்தான் மற்றவர்களும் முன்னுக்கு வர முடியும் என்பது தெரியும். ஒரு குடும்பத்தில் ஒரு பெண் படித்திருந்தால்

[Vidwan T. Muthukannapan] 19th September 1960

அந்தக் குடும்பத்தில் வழி வழி வரும் எல்லோரும் படித்திருப்பார்கள். எனவே 315 லட்ச ரூபாய் செலவில், பள்ளி செல்லும் ஹரிஜனப் பெண் குழந்தைகளுக்கு, ஒருவருக்கு ஒரு ஜதை உடைகள் வீதம் கொடுப்பதை நான் வரவேற்கிறேன். ஆனால் அப்படியே பள்ளி செல்லும் மீனவப் பெண்களுக்கும் உடைகள் கொடுக்க வேண்டும் என்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்கிறேன். ஏனென்றால், மீனவர்கள் பொருளாதாரத்திலும், கல்வியிலும் மிக மிகப் பின்னடைந்து இருக்கிறார்கள். அரசாங்கம் மீனவர்களும் வறுமையில் ஹரிஜனங்களுக்குச் சமமாக இருக்கிறார்கள் என்பதைப் புரிந்து கொண்டிருக்கிறார்கள். சமீபத்தில் ஒரு அறிக்கையிலும் கூறியிருக்கிறார்கள்.

அடுத்தபடியாக, ஒவ்வொரு குப்பத்திற்கும் மீன் கிடங்கு இருக்க வேண்டும். மீன் கிடங்கு கட்டினால், அது "கம்யூனிடி ஸெண்டர்" மாதிரியும் உதவும். ஒவ்வொரு கூட்டுறவு சங்கத்துக்கும் ஒரு கிடங்கு மிகவும் அவசியம். எனவே மீன் கிடங்குகள் இன்னும் பல குப்பங்களிலும் கட்ட வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

மீன் காட்சிசாலைக்காக—"அக்வேரியத்திற்காக"—பத்து லட்சம் ரூபாய் செலவு செய்யப்போகிறார்கள். இதற்காகப் பத்து லட்சமல்ல இன்னும் அதிகமாகக் கூடச் செலவு செய்யட்டும். அதைப் பற்றிக் கவலையில்லை. ஆனால் இது தகுந்த சமயம் அல்ல. ஏனென்றால் மீனவ மக்கள் வறுமையிலும் அறியாமையிலும் உழன்று கொண்டிருக்கிறார்கள். இந்த நிலையில் இவ்வளவு செலவில் மீன் காட்சிசாலை நிறுவுவது, "தன்னைப் பெற்ற தாய் கிண்ணிப் பிச்சை எடுக்கத், தம்பி கும்பகோணத்தில் கோதானம் செய்வது" போல் ஆகும். எனவே, மீனவர்களுடைய முன்னேற்றத்திற்கு அடிகோலும் வகையில் இப்பணத்தை செலவு செய்தால் நன்றாக இருக்கும்.

மேலும், சென்னை நகரின் வட பகுதியில் உள்ள குப்பங்கள் பல ஆண்டுகளாகக் கடல் அரிப்பால் பாதிக்கப்பட்டிருக்கின்றன. அதை உடனடியாகத் தடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

கடைசியாக இன்னொன்று குறிப்பிட விரும்புகிறேன். மீன் இலாகா பெரிய இலாகா. மற்ற எல்லா இலாகாக்களிலும் ஐ.ஏ.எஸ். அலுவலர்கள் தான் தலைமை அதிகாரிகளாக இருக்கிறார்கள். எனவே மீன் தொழிலையும் மீனவர்களையும் பற்றிய அறிவும் திறமையும் ஆற்றலும் படைத்த ஐ.ஏ.எஸ். அலுவலர் ஒருவரை இந்த இலாகாவின் தலைமை அதிகாரியாக நியமித்தால் நன்றாக இருக்கும் என்று சொல்லி முடித்துக் கொள்கிறேன். வணக்கம்.

MR. CHAIRMAN: The House will now adjourn and meet again at 3 p.m. tomorrow.

The House then adjourned.